# பர்மாவில் பெரியார்



நாரா நாச்சியப்பன்

பெரியாருடன்
பாவலர் நாரா நாச்சியப்பன்



பெரியார் சிங்கப்பூருக்குச் செல்லுமுன் இரங்கூன்
துறைமுகத்தில் எடுத்த படம் டிசம்பர் 1954.

## மறக்க முடியாது!

பெரியார் பர்மாவுக்கு வந்தபோது அவருக்கு வரவேற்பளிக்க முடிவு செய்து – கடைசி வரை தங்கள் அரிய உழைப்பை நல்கிய பர்மா திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்களும் –

அவர்களில் குறிப்பிடத் தகுந்த

தோழர்களான

உதயணன், கன்னையன், நமசிவாயம், மதியழகன், சேரன், தமிழரசன் மற்றும் பலருந் தேனீக்கள்போல் ஆர்வத்துடன் ஓடி ஓடி உழைத்த பாங்கினையும் பண்பினையும் யாராலும் என்றென்றும் மறக்கமுடியாது.

# முன்னுரை

நாற்பது ஆண்டுகளுக்கு முந்திய வரலாற்றுச் செய்தி இது.

ஆம்! இந்தச் சிறிய புத்தகம் பற்றித்தான் கூறுகிறேன்.

புத்தகம் சிறியது தான். இதன் தலைவர் பெரியார் அல்லவா?

இந்த நாட்டின் தலைவிதியை மாற்றி எழுதிவிட்ட காலத்தலைவன் அல்லவா பெரியார்!

அவர் கண்ட தன்மான இயக்கம் சாதித்திருக்கிற செயல் சாதாரணமானதா?

நாட்டில் எவ்வளவு பெரிய மாற்றத்தை உருவாக்கி விட்டது அவருடைய உழைப்பு.

சோர்வு படாத அவருடைய உழைப்பால் இன்று தமிழ்நாட்டு மக்கள் அடைந்திருக்கும் பயன் இத்தனை - இவ்வளவென்று யாரும் எண்ணிப் பார்க்க முடியுமா?

"வேறு யாரும் முன்வராததால், நான் என் தலைமேல் தூக்கிப் போட்டுக் கொண்டு செய்கிற செயல் இது" என்று அந்தச் செயல்வீரர் தன் வேலையைப் பற்றிச் சொல்லிக் கொண்டார்.

1945 ஆம் ஆண்டில் என்னுடைய பதினெட்டாம் வயதில் குடியரசு படித்த நான் பகுத்தறிவுக் கருத்துக்களை ஏற்றுக் கொண்டேன். நாடு விடுதலை அடைவதைவிட,

மக்கள் மூடத் தனங்களிலிருந்து விடுதலை பெறுவது மிகமிகத் தேவையானது என்ற கொள்கை—சுயமரியாதைக் கொள்கை அன்று என் உள்ளத்திலே வேர் கொண்டது.

ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு, 1954—ல் பெரியாரை வரவேற்று பத்துநாட்கள் அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குத் தானாக ஏற்பட்டது.

அரசியல் தலைவர்களுடன் நெருங்கிப் பழகும்போது, அவர்களுடைய தனிப்பட்ட வாழ்க்கை முறையால், அவர்களுடைய தனிப்பட்ட குணக்கேடுகளால், அவர்களுடைய தனிப்பட்ட ஆசா பாசங்களால் அவர்களுடைய தனிப்பட்ட பழக்க வழக்கங்களால் தொண்டர்கள் கசந்துபோன அனுபவங்கள் பல,

ஆனால் இந்தத் தலைவர் – என் அன்புத் தலைவர் – பெரியார் – இவர் ஓர் அரசியல் தலைவராக இல்லாத காரணத்தாலோ என்னவோ – ஒரு சமுதாயத் தலைவராக இருப்பதால் தானோ – தம் வாழ்க்கையை ஒரு திறந்த புத்தகமாக ஆக்கிக் கொண்டிருந்தார்.

ஒளிவு மறைவு இல்லாமல் மக்களிடையிலே மிக எளிமையாக – யாரும் நெருங்கத் தக்க சூழ்நிலையிலே – என்றென்றும் மக்கள் தலைவராக – மக்கள் நலம் பற்றியே சிந்திப்பவராக – மக்களுக்காகவே தன் வாழ்வு என்ற இலட்சியம் கொண்டவராக வாழ்ந்தார் பெரியார்.

பர்மாவில் நான் இருந்தபோது பத்து நாட்கள் நாள் ஒன்றுக்கு ஏறத்தாழ 5 மணி நேரம் – மட்டுமே அவருடன் நான் இருந்தேன். அந்தப் பத்து நாட்களின் வரலாற்றுக் குறிப்புதான் இது.

அன்றைய நிலையில் போட்டிக் கழகமாக உருவெடுத்து விட்ட, திராவிட முன்னேற்றக் கழகம் என்ற பெயரால் இயங்கிவந்த நாங்கள் கொடுத்த வரவேற்பைச் சற்றும் மனம் கோணாமல் ஏற்றுக் கொண்ட பெருந்தன்மை –

வெளிநாட்டுக்குப் பிழைக்க வந்த நாங்கள் அவருடைய வருகையால் தொல்லைக்கு ஆளாகக் கூடாதென்ற கருத்தில் மேற்கொண்டு கூட்டங்கள் வேண்டாம் என்று மறுத்தபோது அவரிடம் காணப்பட்ட பிறர் நலம் பேணும் தகைமை –

என் அனுபவக் குறைவால் மோல்மேன் பயணம் ஏற்படுத்திய வீண்தொல்லைக்குப் பிறகு, என் மனத் துயரை அறிந்து என்னை அமைதிப் படுத்திய அந்த வாஞ்சை –

இவை எல்லாவற்றையும் நினைத்துப் பார்க்கும்பொழுது பெரியார் மீது ஏற்படுகின்ற மதிப்பு சுடச்சுடரும் பொன்போல் ஒளிர்கின்றது.

புத்தருக்குப் பிறகு இந்திய நாட்டில், மக்கள் நலம் ஒன்றே குறிக்கோளாக வாழ்ந்த ஒப்பற்ற தலைவர் பெரியாரை வரவேற்கும் வாய்ப்பும் – அவருடைய இலட்சியத் தொண்டனாக இயங்கும் நிலையும் கொண்டிருப்பதில் நான் பெருமைப்படுகிறேன்.

மக்களிடையே தன்மான உணர்வு ஏற்படுத்துதல் – சாதி மத பேதங்களைத் தகர்த்தல் – ஒருவரை யொருவர் ஏமாற்றியும், சுரண்டியும் வாழும் கொடுந் தன்மையைப் போக்கி சமத்துவ நிலையில் வாழும்படியான பொதுவுடைமைச் சமுதாயத்தை அமைத்தல் – இதுபோன்ற அவருடைய இலட்சியங்கள் நிறைவேற உழைப்பதே நம் வாழ்வின் குறிக்கோளாக இருக்க வேண்டும்;

இன்றைய இளைஞர்களுக்கு இப் புத்தகத்தை என் அன்புப் படைப்பாக அளிக்கிறேன்.

நடிப்பு உலகத்தை ஆராதிப்பதை விட்டு அவர்கள் நேரான பாதைக்கு வர வேண்டும்!

தன்னலம் வளர்க்கும் பக்திக் குழுக்களை விட்டு அவர்கள் இலட்சியப் பாதைக்குத் திரும்ப வேண்டும்.

இளமைப் பருவத்தினைத் திசை திருப்பி – கவர்ச்சி மயக்கம் காட்டும் பத்திரிகைகள், புத்தகங்கள் ஆகியவற்றைப் படிக்கும் பாழான பழக்கத்திலிருந்து அவர்கள் விடுதலை பெற வேண்டும்.

காந்தியடிகள். டாக்டர் அம்பேத்கார், நேரு, நேதாஜி, சிங்காரவேலர், கோரா, பெரியார், காமராசர், பாரதியார் நாவலர் பாரதியார், அண்ணா, மறைமலையடிகள், திரு.வி.க. குருசாமி போன்ற இலட்சியவாதிகளின் வரலாறுகளைப் படிக்க வேண்டும். நாட்டுக்காக நாட்டு மக்களுக்காகச் சிந்தித்துச் செயல்பட்ட அந்த மாமேதைகளின் அடிச்சுவட்டைப் பின் பற்றி இலட்சியப் பாட்டையில் நடை போட வேண்டும்.

அந்தச் செவ்விய முயற்சியில் இளைஞர்களைத் திருப்பும் தூண்டு கோலாக இந்தப் புத்தகம் அமையுமென்றால், அதுவே எனக்குக் கிடைக்கும் பெரும் பரிசாகக் கருதி நான் மிகுந்த மகிழ்ச்சி யடைவேன்.

அன்புள்ள,

நாரா நாச்சியப்பன்

# பர்மாவில் பெரியார்

## இரங்கூன் வருகை

**1954**

அனைத்துலக புத்த சமய மாநாடு, பர்மாவின் தலை நகரான இரங்கூனில் நடக்கவிருந்தது. இம்மாநாட்டை பர்மிய அரசே முன்னின்று நடத்தியது, அப்போது பர்மாவின் தலைமை அமைச்சராக இருந்த ஊநூ, புத்தமதத்தில் ஆழ்ந்த பற்றுக்கொண்டவர், உண்மையான சமய நம்பிக்கை உடையவர், சமய நெறிப்படி வாழ்க்கை நடத்தியவர். அவருடைய ஆர்வமும், பெருமுயற்சியும். தான் அனைத்துலக புத்த சமய மாநாட்டின் சிறப்புக்குக் காரணமாய் அமைந்தன.

புதிதாக புத்தசமயத்தில் சேர்ந்த டாக்டர் அம்பேத்காரின் தலைமையில் இந்த மாநாடு நடந்தது.

டாக்டர் அம்பேத்கார் புத்த சமயத்தில் புதிதாகச் சேர்ந்ததால், அதற்குப் புது வலிவும் பொலிவும் கூடியிருந்தது, எனவே மாநாட்டைக் கூட்டியவர்கள் பெருமைக்குரிய டாக்டர் அம்பேத்கார் தலைமையில் அதனைக் கூட்டுவதே சிறப்பென்று முடிவு செய்தார்கள்.

தலைமை அமைச்சர் ஊநூவின் பேரார்வத்தின் காரணமாக மாநாடு மிகச் சிறப்பாக நடந்தது. இரங்கூனை

அடுத்த கபா ஏ என்ற இடத்தில் அமைதிக் கோபுரம் ஒன்று கட்டி அதன் அருகில் மாநாடு நடைபெறுவதற்காக மலைக்குகை போன்ற அமைப்புடைய ஒரு பெரிய கூடம் கட்டப்பட்டது.

அந்தக் கூடத்தில் தான் உலக புத்தசமயத் தலைவர்கள் கூடினார்கள்.

டாக்டர் அம்பேத்கார், இந்த மாநாட்டில் பெரியாரும் கலந்து கொள்ளவேண்டும் என்று விரும்பினார். அவருடைய விருப்பத்தை மாநாட்டுக் குழுவினர் ஒப்புக்கொண்டனர்.

உடனே பெரியாருக்குத் தந்தி பறந்தது. உயிர் நண்பரும் தாழ்த்தப்பட்ட மக்களை முன்றேற்றுவதற்கென்றே வாழ்வை ஈடு வைத்தவருமான மற்றொரு தலைவர் அம்பேத்கார் அழைக்கிறார் என்றவுடன் பெரியாரும், தம் மற்ற வேலைகளையெல்லாம் புறத்தள்ளி விட்டு உடனே புறப்பட்டார்.

இரண்டே நாளில் பயணத்துக்கு வேண்டிய அத்தனை ஏற்பாடுகளையும் செய்துகொண்டு அப்போதே புறப்பட —விருந்த சோனாவதி என்ற கப்பலில் புறப்பட்டு விட்டார்.

பெரியார் மாநாட்டுக்குப் புறப்பட்டு வரும் செய்தி அனைத்திந்திய வானொலியில் ஒலிபரப்பப் பட்டது.

இரங்கூனில் இருந்த தன்மானத் தோழர்களாகிய எங்களுக்கெல்லாம் இச்செய்தி பெரும் ஊக்கத்தையும் மகழ்ச்சியையும் கொடுத்தது.

வானொலியில் இச்செய்தியைக் கேட்ட நான் பெரியாரை இரங்கூனில் பார்க்கப் போகிறோம் என்ற

அளவில் மகிழ்ச்சியுற்றேன், ஆனால் அதற்கப்பால் நான் எந்த நினைப்பும் கொள்ளவில்லை.

அப்போது நான் இரங்கூனில் இயங்கி வந்த பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தின் அந்த ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்ட பொதுச் செயலாளராக இருந்தேன்.

திராவிட முன்னேற்றக்கழகம் தோன்றிய தொடக்க காலம், பெரியார் திருமணத்தின் காரணமாக வெறுப்புற்ற திராவிடர் கழகத் தோழர்கள்; தளபதி அண்ணாவின் தலைமையில் பிரிந்து உருவாக்கிய கழகம் 'திராவிட முன்னேற்றக் கழகம்'. அதன் ஒரு கிளையாக இயங்கி வந்தது பர்மா திராவிட முன்னேற்றக் கழகம்.

பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தில் ஐநூறு உறுப்பினர்கள் இருந்தார்கள். அக்கழகத்தின் தோழர்கள், நான் இரங்கூனில் இருந்த காலத்தில் என்னை அடிக்கடி சந்தித்து கழகப்பணியில் என் ஒத்துழைப்பைப் பெற்றுக் கொண்டார்கள். புதிய பொதுச்செயலாளர் தேர்ந்தெடுக்கப் பட வேண்டிய கட்டத்தில் என்னை வற்புறுத்தி ஒப்புதல் கேட்டுப் பொதுச் செயலாளர் பதவியை எனக்குக் கொடுத்தார்கள்.

1954 ஆம் ஆண்டு பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுச்செயலாளராக இருந்த நான், பெரியார் பர்மாவுக்கு வருகிறார் என்ற செய்தி கேட்டு மகிழ்ச்சியடைய முடிந்ததே தவிர அதற்கு மேல் சிந்திக்க முடியவில்லை.

செய்தி கேட்ட மறுநாள், பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொருளாளரும், சிறந்த பேச்சாளருமான சேரன் என்னைத் தேடிவந்தார்.

"செய்தி கேட்டீங்களா?" என்றார்.

ஆமென்றேன்.

"என்ன ஏற்பாடு செய்யப் போகிறீர்கள்?" என்றார்.

"நாம் என்ன செய்வதற்கிருக்கிறது?" என்றேன்.

"பெரியாருக்கு வரவேற்புக் கொடுக்கலாமே!" என்றார்.

"நாம் திராவிட முன்னேற்றக் கழகத்துக்காரர்கள்; திராவிடர் கழகம் அல்ல" என்றேன்.

"ஆம். பெரியார் நம் தலைவர், அவர் முதன் முதலாக பர்மாவுக்கு வருகிறார், நாம் தானே வரவேற்புக் கொடுக்க வேண்டும்" என்றார்.

"கண்ணீர்த்துளிகள்" என்ற பெயரால் பெரியாரால் அழைக்கப்பட்ட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர் –களுக்கும் அவர்தான் தலைவர்.

நண்பர் சேரன் சொன்னதை என்னால் மறுக்க முடியவில்லை. "பெரியார் நம் தலைவர்." என்ற உண்மையை ஒதுக்கித் தள்ளமுடியவில்லை.

"சரி. பொதுக்குழுவை கூட்டுவோம், முடிவெடுப்போம்" என்று கூறி அன்றே பொதுக்குழு உறுப்பினர்கள் ஐம்பது பேருக்கும் அழைப்பு அனுப்பி மாலை ஓர் அவசர ஆலோசனைக்கூட்டம் நடத்தினோம்.

பெரியாருக்கு வரவேற்புக் கொடுக்கவேண்டும் என்று ஆறு தோழர்கள் பேசினார்கள். இறுதியில் நான் தீர்மானத்தை முன் மொழிந்தேன்.

நான்கு தோழர்கள் மட்டும் எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.

ஐம்பது பேரில் நாற்பத்தாறு பேர் ஒப்புக் கொண்டு விட்டார்கள். ஆனாலும், ஒப்பற்ற ஒரு தலைவருக்கு நாம் கொடுக்கும் வரவேற்பு ஒரு மனதாக இருக்கவேண்டும் என்று நான் எடுத்துக்கூறியதன் பேரில் அந்த நான்கு தோழர்களும் தீர்மானத்தை ஏற்றுக்கொண்டு கையெழுத்திட்டார்கள்.

நாம் ஒருமனதாகத் தீர்மானித்து விட்டோம், ஆனால் நம் வரவேற்பைப் பெரியார் ஏற்றுக் கொள்வார்களா? இப்படி ஒருவர் ஐயப்பட்டார்.

இந்த ஐயம் சரியானதே. ஏற்பாடுகளையும் செய்வோம், பெரியார் கப்பலை விட்டு இறங்குமுன் கப்பலிலேயே போய்ச் சந்திக்கலாம். அவர் ஒப்புக்கொண்டால் வரவேற்புக் கொடுத்துப் பல கூட்டங்கள் நடத்துவோம், இல்லாவிட்டால் அமைதியாகத் திரும்பிவிடுவோம்.

இவ்வாறு முடிவெடுத்தோம்.

நுழைமுகத்தில் கப்பல் வந்து கொண்டிருக்கிறது. இரங்கூன் ஆற்றில் நுழைந்து துறைமுகம் வர இன்னும் நான்கு மணி நேரம் ஆகும்.

நான் காலை 5 மணிக்கு துறைமுகம் சென்றேன். துறைமுகம் வந்து சேரும் முன்பே கப்பலில் ஏறிச் சுங்க அதிகாரிகள் சோதனை போடுவது வழக்கம். அந்தச் சோதனைக்காக ஒரு மோட்டார் படகில் சுங்க அதிகாரிகள் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள், நான் விரைந்து சென்றேன். "நானும் உங்களுடன் வருகிறேன்" என்றேன்.

"நீ எங்களோடு வரக்கூடாதே" என்றார்கள்.

"தெரியும், புத்த சமய மாநாட்டுக்காக எங்கள் தலைவர் இந்தக் கப்பலில் வருகிறார். முன்னாலேயே அவரைப் பார்த்து முன்னேற்பாடுகள் செய்யவேண்டும். தயவுசெய்து என்னை அழைத்துச் செல்லுங்கள்" என்றேன். மாநாடு என்றவுடன் அவர்கள் மகிழ்ச்சியோடு என்னைச் சேர்த்துக் கொண்டார்கள்.

துறைமுகத்தில் வந்து சேர்வதற்கு நான்கு மணி நேரம் முன்னதாக, ஆற்று நுழைமுகத்தில் மெல்ல வந்து கொண்டிருந்த கப்பலில் சுங்க அதிகாரிகளுடன் நானும் கப்பலில் ஏறினேன். சற்றுநேரத்தில் குடியேற்ற அதிகாரிகளும் கப்பலில் ஏறிவிட்டார்கள். சுங்க அதிகாரிகள் ஒருபுறம் குடியேற்ற அதிகாரிகள் ஒருபுறம் பயணிகளைச் சோதனையிட்டுக் கொண்டிருக்கும் நேரத்தில் நான் பெரியாரைத் தேடினேன். கப்பல் மேல்தட்டில் அதிகாரிகளின் சோதனைக்காகப் பெரியார் க்யூ வரிசையில் நின்று கொண்டிருந்தார், அவர் அருகில் மணியம்மையார். அடுத்து உதவியாளர் ராஜாராம்.

நேரே பெரியாரிடம் சென்று "வணக்கம் அய்யா" என்று வணங்கினேன்.

"நான்கு நாளாகக் கப்பலில் இருந்தபோது என்ன செய்தாய்? இப்போது இறங்கப் போகிறபோது வருகிறாயே, அதிகாரிகள் பார்த்தால் சினம் கொள்வார்கள், போ போ" என்றார் பெரியார்.

அய்யா, நான் கரையிலிருந்து தான் வருகிறேன், அதிகாரிகளின் லாஞ்சில் தான் வந்தேன்.

நீங்கள் இரங்கூனுக்கு வருவதாக வானொலியில் செய்தி கேட்டோம் உங்களுக்கு வரவேற்புக் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். இங்கே திராவிடர் கழகம் கிடையாது. திராவிடர் முன்னேற்றக் கழகம் தான் இருக்கிறது. நாங்கள் தான் உங்களுக்கு வரவேற்புக் கொடுக்கிறோம். நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா? என்று அறிந்து கொள்ளவே முன்னதாக வந்தேன்"

"நீ யார் என்று எனக்குத் தெரியாதே!"

முருகு சுப்பிரமணியன் நடத்தும் பொன்னி இதழில் துணை ஆசிரியராகப் பணியாற்றியவன். பெயர் நாச்சியப்பன்

"கவிஞர் நாச்சியப்பனா? நீ எங்கே இந்த ஊரில்?"

"அய்யா நான் வந்து நான்கு ஆண்டுகளாகிறது. இங்கு தான் ஒரு கப்பல் உணவுப் பொருள் ஒப்பந்தக்காரிடம் வேலை செய்கிறேன். இங்குள்ள திராவிடர் முன்னேற்றக் கழகத்திற்கு இந்த ஆண்டு நான்தான் பொதுச் செயலாளர்."

"உங்களை வரவேற்பதற்கு எங்கள் உறுப்பினர்கள் ஐநூறுபேரும் உற்சாகமாக இருக்கிறார்கள்."

"உங்கள் வரவேற்பை நான் ஏற்றுக் கொள்கிறேன். நீ ஏற்பாடுசெய்" என்றார் பெரியார்.

"என்ன தி.மு.க வா?" என்றார் மணியம்மையார்.

"வந்த இடத்திலே தி க என்ன தி மு க என்ன? பசங்க ஆர்வமாக இருக்காங்க. தம்பி நீ ஏற்பாடு செய்?" என்றார் அன்புத் தந்தை பெரியார்.

எனக்கு கரை கொள்ளாத மகிழ்ச்சி

"அய்யா, எத்தனை நாள் இருக்கப் போகிறீர்கள்?"

"அம்பேத்காரைப் பார்த்த பிறகு தான் முடிவு செய்யவேண்டும்."

"அய்யா எங்கே தங்கப் போகிறீர்கள்?"

"அம்பேத்காரைப் பார்த்த பிறகு தான் தெரியும்"

"சரி, தற்சமயம் எங்கள் வீட்டுக்கு வருகிறீர்களா?"

"வருகிறேன்!" என்றார் பெரியார்.

எனக்குப் பெரு மகிழ்ச்சி ஏற்பட்டது.

வந்தது வீண் போகவில்லை.

பெரியார் தி மு க வரவேற்பை ஏற்றுக் கொள்ள ஒப்புக் கொண்டுவிட்டார். பெருந்தன்மைக்கு இலக்கணமாகி விட்டார்.

இனி, கழகத் தோழர்கள் இடையே வெற்றிப் பெருமிதத்தோடு பேசமுடியும்.

அதிகாரிகளின் சோதனைகள் – வழக்கமான சடங்குகள் ஆகியவற்றைப் பெரியார் பார்க்கட்டும் என விட்டுவிட்டு அதே கப்பலில் இரங்கூனுக்கு வந்த என் மனைவியிருக்கும் பகுதி எதுவென்று தேடிக்கொண்டு புறப்பட்டேன்.

அங்கேயும் அதிகாரிகள் பயணிகளின் பயணச் சீட்டுகளைச் (Passports) சரிபார்த்துக் கொண்டிருந்தார்கள்.

என் உறவினர் ஒருவரோடு வந்திருந்த மனைவியைச் சந்தித்தேன்.

"கப்பலில் கூட்டிக்கொண்டு வந்தீர்கள், வீட்டுக்கும் நீங்களே கூட்டிக்கொண்டுவந்து விட்டுவிடுங்கள். நான் பெரியாரை அழைத்துக்கொண்டு செல்கிறேன்", என்று

கூறி எங்களுக்காக வாடகைக்குப் பிடித்திருந்த வீட்டின் முகவரியை உறவினரிடம் கொடுத்தேன். மீண்டும் பெரியாரிடம் வந்து சேர்ந்தேன்.

கப்பல் துறைமுகத்துக்கு வந்து சேர்ந்தது. 10 மணியிருக்கலாம். ஏணிப்படியை இறக்கினார்கள், பயணிகள் ஒவ்வொருவராக இறங்கினார்கள், நான் பெரியாரை அழைத்துக் கொண்டு இறங்கினேன்.

வலது கையில் தடியும் இடது கை என் தோள்மீதுமாக ஊன்றிக் கொண்டு பெரியார் படிப்படியாக மெதுவாகக் கப்பலை விட்டு இறங்கி வந்தார்.

மணியம்மையும் தோழர் ராஜாராமும் பின்னால் தொடர்ந்துவந்தார்கள்.

துறைமுகத்தில் எதிர்புறத்தில் திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள்! மற்ற மூன்று புறத்திலும் ஆற்றின் மீது படகுகளில் திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள்! நான்கு புறமும் தோழர்கள்; மற்றும் ஆதரவாளர்கள்.

பெரியார் தலை வெளியே தெரிந்தவுடன் வாழ்க முழக்கம் வானைப் பிளந்தது.

பெரியார் வாழ்க!

பெரியார் வாழ்க!

பெரியார் வாழ்க!

தொடர்ந்து தோழர்கள் முழங்கினார்கள்.

பயணிகள், பயணிகளை வரவேற்கக் கப்பலடிக்கு வந்திருந்த உறவினர்கள், ராணுவ அதிகாரிகள் கப்பல்துறையினர், சுங்கத் துறையினர் எல்லாரும் பெரியாரையே நோக்கினார்கள்.

கருப்புச்சட்டையும், வெள்ளைத் தாடியும், சிவந்த மேனியும், நிமிர்ந்த பார்வையும் கொண்டபொலிவு மிகுந்த அந்தத் தலைவரையே எல்லாரும் நோக்கினார்கள்.

யார் இவர்?

புத்த சமய மாநாட்டிற்காக வந்திருக்கும் இந்திய நாட்டுப் பொங்கி!

புத்த பிக்குகளை பர்மிய மொழியில் பொங்கி (Poungyi) என்று அழைப்பார்கள்.

அருகில் வந்தார்கள்! வணங்கினார்கள்!

காஞ்சி மடாதிபதிக்கு நமது குடியரசுத் தலைவர்களும், தலைமையமைச்சர்களும், நீதிபதிகளும், IAS அதிகாரிகளும், மேல் சாதியினரும் செய்கிற மரியாதையை அன்று பெரியாரைக் கண்ட அத்தனைபேரும் செய்ததை நான் கண்டேன்.

அவரை ஒரு புத்தசமய பிக்குவாகக் கருதிய அவர்கள் அனைவரும் அவ்வாறு வணங்கி நின்றார்கள்.

காவல் துறை அதிகாரிகளும், சுங்கத் துறையினரும், கப்பலடிக்குக் காவலுக்கு வந்திருந்த இராணுவ வீரர்களும் கூடப் பெரியாரைக் கண்டவுடன் கையெடுத்துக் கூப்பி வணங்கினார்கள்.

சுங்கப்பரிசோதனை செய்ய வந்த அதிகாரிகள் பெரியாரின் பெட்டிகளைத் திறக்கவேண்டாம் என்று கூறியே எங்களைப் போகவழிவிட்டார்கள். எனவே, அந்த ஆய்வுக் கூடத்துக்குள் நுழைந்த ஐந்தாவது நொடி துறைமுகத்தின் வெளியில் வந்துவிட்டோம்.

ஒரு ஜீப்பை வாடகைக்குப் பிடித்துக் கொண்டு நேரே எங்கள் வாடகை வீட்டுக்குப் புறப்பட்டேன்.

வீடுவந்தவுடன் கீழே இறங்கினேன், பெரியாரும் தோழர் ராஜாராமும் மணியம்மையாரும் இறங்கினார்கள். பெரியார் என் கையைப் பிடித்துக்கொண்டார். மெல்ல அழைத்துக்கொண்டு ஒடுங்கிய படிக்கட்டுப் பாதை வழியே மேலே ஏறினேன்.

மூன்றாவது மாடி வந்தவுடன், பூட்டியிருந்த கதவைத் திறந்தேன்.

கூட்டிமெழுகித் தூய்மையாக இருந்த அந்த வீட்டினுள் நுழைந்தவுடனே,

"எங்களுக்காகவே இந்த வீட்டை ஏற்பாடு செய்திருக்கிறீர்களா?" என்று மணியம்மையார் கேட்டார்கள்.

"இல்லை நாங்கள் குடியிருப்பதற்காக வாடகைக்குப் பிடித்த வீடு" என்றேன்.

"எங்களைத் தங்க வைப்பதற்காக உங்கள் மனைவியை வேறு வீட்டிற்கு அனுப்பிவிட்டீர்களா?"

"இல்லை என் மனைவியும் இதே கப்பலில் தான் வருகிறாள், இன்னும் சற்று நேரத்தில் வந்துவிடுவாள்".

"என்ன பிள்ளை நீ! மனைவியை விட்டுவிட்டு எங்களைக் கூட்டிக்கொண்டு வந்துவிட்டாயே! போ போ! காரில் சென்று உடனே அழைத்துக்கொண்டு வா!" என்று பெரியார் சொல்லுமுன்னாலே என் மனைவி பெட்டி படுக்கை, முதலிய பதினைந்து மூட்டை முடிச்சுகளோடு வந்து இறங்கினாள்.

கூலிக்காரர்கள் எல்லாப் பொருள்களையும் இறக்கிவைத்தவுடன், "சென்னையிலிருந்து குடித்தனம் நடத்தவேண்டிய எல்லாச் சாமான்களுமே கொண்டு வந்துவிட்டாயா?" என்று மணியம்மையார் கேட்க,

கால் முகம் கழுவி விட்டு, என் மனைவி அடுப்புப் பற்றவைத்தாள்.

"என்ன செய்யப்போகிறாய்?" என்று அம்மையார் கேட்க,

"சமைக்கப்போகிறேன்" என்று கூறிக்கொண்டே, காய்கறிகள், மளிகைச் சாமான்கள், அரிசி, பருப்பு எல்லாவற்றையும் மூட்டைகளிலிருந்து பிரித்தெடுத்தாள் என் மனைவி.

நான்கு நாட்களாகக் கப்பலில் வந்திருக்கிறாய். எங்களைப் போல் உனக்கும் அலுப்பாகத் தானே இருக்கும். இன்று சமைக்கவேண்டாம். எல்லோரும் ஓட்டலில் சாப்பாடு எடுத்துவரச்சொல்லிச் சாப்பிடலாம். நாளை நீ சமைத்து நாங்கள் சாப்பிடுகிறோம்" என்று மணியம்மையார் கூற, பெரியாரும் வற்புறுத்திச் சொன்ன பிறகு என் மனைவி சமைக்கும் வேலையை நிறுத்தினாள்.

"வெந்நீர் மட்டும் போடுகிறேன், எல்லாரும் குளியுங்கள்" என்று அடுப்பைப் பற்றவைத்தாள்.

"குளிப்பதா? நாளைப் பார்த்துக் கொள்ளலாம்" என்று பெரியார் கூற, மணியம்மையாரும், ராஜாராமும் என் மனைவியும் ஒருவர் பின் ஒருவராகக் குளித்தார்கள்.

சிறிது நேரங்கழித்து பால்கனி வழியாகத் தெருப்பக்கம் எட்டிப் பார்த்தேன்.

எங்கள் வீட்டின் முன் பெருங்கூட்டம் நின்று கொண்டிருந்தது. எங்கள் வீட்டுக்கு வரும் படிக்கட்டு வாயிலின் முன் இரண்டு கழகத் தோழர்கள் நின்று கூட்டம் உள்ளே நுழைந்துவிடாதபடி கண்காணித்துக் கொண்டிருந்தார்கள்.

யார் எவர் என்று விசாரித்துக் குறிப்பிட்ட சிலரை மட்டும் அனுமதித்துக் கொண்டிருந்தார்கள்.

மிக ஒழுங்குபடுத்தி, ஒரு தடவைக்கு இரண்டு மூன்று பேரை மட்டும் அனுப்பினார்கள், அவர்கள் பெரியாரைப் பார்த்துப் பேசித் திரும்பிய பின் அடுத்து இரண்டு அல்லது மூன்று பேரை அனுப்பினார்கள்.

மற்ற கழகத் தோழர்கள் நடைபாதையில் நின்று கொண்டிருந்தார்கள்.

மேலே வந்தவர்கள் பெரியாருக்கு வணக்கம் சொன்னார்கள். புத்தசமய மாநாட்டில் கலந்து கொள்ள வந்த இந்தியத்தலைவர் என்ற முறையில் பெரியாரை வரவேற்க வாய்ப்புக் கிடைத்ததற்கு மகிழ்ச்சி தெரிவித்தார்கள். பெரியாரின் வாழ்த்துரையைப் பெற்றுக் கொண்டு திரும்பினார்கள்.

இரங்கூனில் இருந்த அத்தனை இந்தியச் சங்கத் தலைவர்களும், பெரியாரை வந்து சந்தித்து வணங்கி வாழ்த்துப் பெற்றுச் சென்றார்கள்.

**அப்படி வந்தவர்களின் பட்டியல்**

அகில பர்மா இந்தியன் காங்கிரஸ்
அகில பர்மா தமிழர் சங்கம்
அனைத்து பர்மா குஜராத்தி சங்கம்

பர்மா மார்வாரி சங்கம்
பர்மா முஸ்லிம் லீக்
பெங்காளி சங்கம்
ஜெயின் சங்கம்
ஆந்திரர் சங்கம்
மலையாளிகள் சங்கம்
நாடார் சங்கம்
சோழியா முஸ்லிம் சங்கம்
ஓட்டல் தொழிலாளர் சங்கம்

இரங்கூனில் இருந்த எல்லா இந்தியத் தலைவர்களும், பெரியாரை வந்துசந்தித்துச் சென்றார்கள்.

முந்தியநாள் வரை யாருக்கும் தெரியாதிருந்த என் வீடு, ஒரே நாளில் இந்திய இனத் தலைவர்கள் அத்தனை பேரும் தேடிவந்து கூடும் இடமாக மாறிவிட்டது.

மூன்றுமணி வரை பெரியார் வந்தவர்களிடமெல்லாம் முகமலர்ச்சியோடு பேசிக்கொண்டிருந்தார். சற்று ஓய்வெடுத்தால் தேவலை என்று கூறவே, கீழே இருந்த கழகத் தோழர்களிடம், மேற்கொண்டு யாரையும் உள்ளே அனுமதிக்கவேண்டாம் என்று கூறி, உணவு விடுதியிலிருந்து வந்த சாப்பாட்டை எடுத்து என் மனைவி பரிமாற அனைவரும் உணவு உண்டோம்.

சுமார் இரண்டு மணிநேரம் தூங்கியபிறகு பெரியார் கண் விழித்தார்.

என் மனைவி கொண்டு வந்திருந்த சீடை, முறுக்கு, அதிரசம், பிஸ்கட் ஆகியவற்றுடன் காப்பியருந்தினோம்.

பெரியார் என்னை அருகில் அழைத்தார்.

எனக்கு இரத்த அழுத்தம் இருக்கிறது. மருத்துவர்கள் மாடிப்படி ஏறக்கூடாதென்று கூறியிருக்கிறார்கள். காலையில் நம் தோழர்கள் கொடுத்த வரவேற்பில் என்னை மறந்து உற்சாகமாக மூன்றுமாடி ஏறி வந்துவிட்டேன். எனக்குத் துன்பமே உண்டாகவில்லை. ஆனால் தொடர்ந்து நான் மாடியில் ஏறிவர முடியாது. இங்கே இந்தப்பெண் (என் மனைவியைக் காட்டி) ஓடி ஓடி எங்கள் தேவைகளைக் கவனித்துக் கொள்கிறாள். சிறிதுகூடக் குறைவைக்கவில்லை. இருந்தாலும் கீழ் வீடாக ஒன்று ஏற்பாடு செய்தால் நன்றாக இருக்கும்' என்று கூறினார்.

"உடனே ஏற்பாடு செய்கிறேன்" என்றேன்.

கழகத் தோழர்கள் உதயணன், கன்னையா, மதியழகன், தமிழரசன் ஆகியோர் அங்கே இருந்தார்கள்.

"அய்யாவுக்குக் கீழ் வீடாக ஒன்று ஏற்பாடு செய்யவேண்டுமே" என்றேன்.

"உடனே ஏற்பாடு செய்து கொண்டுவருகிறோம்" என்று அவர்கள் புறப்பட்டார்கள்.

வீடு ஏற்பாடு செய்யச் சென்ற தோழர்கள் இன்னும் திரும்பவில்லை.

நான்கு தோழர்கள் வந்தார்கள். "பெரியார் தங்குவதற்காக நாங்கள் வசதியான ஒரு வீடு பிடித்திருக்கிறோம். உடனே அவரை அங்கே அழைத்துச் செல்லலாம்" என்றார்கள்.

பெரியாருக்கு வரவேற்புக் கொடுக்கக் கூடாதென்று பொதுக்குழுவில் எதிர்ப்புத் தெரிவித்த அந்தத் தோழர்கள் இவ்வளவு ஆர்வமாகப் பெரியாருக்கு வீடு ஏற்பாடு செய்தது வியப்பாய் இருந்தது.

"நான் வேறு தோழர்களிடம் வீடு ஏற்பாடு செய்ய அனுப்பியிருக்கிறேனே!" என்றேன்.

"நாங்கள் வீடு பேசி ஒரு மாத வாடகையும் முன் பணமாகக் கொடுத்துவிட்டோம். உடனே அவரை அழைத்துச் செல்லவேண்டும்".

"நான் உங்களை வீடு பார்க்கச் சொல்லவில்லை, பரவாயில்லை, வீடு எங்கே பார்த்திருக்கிறீர்கள்? வசதியான வீடா?" என்று கேட்டேன்.

"மிக வசதியான வீடு," என்று கூறி முகவரியைச் சொன்னார்கள்;

"கீழ் வீடு தானே?" என்று கேட்டேன்.

"இல்லை, இரண்டாவது மாடி" என்றார்கள் அந்தத் தோழர்கள்.

"பெரியார் மாடியில் ஏறிவர முடியாது. கீழ் வீடாக இருந்தால் தான் வசதி! இருக்கட்டும். போன தோழர்கள் வரட்டும். அவர்கள் ஏற்பாடு செய்துள்ள வீடு எப்படி என்று தெரிந்து கொண்டு, பிறகு முடிவெடுக்கலாம்" என்றேன்.

சிறிது நேரத்தில் அந்த நண்பர்கள் வந்தார்கள்.

"மவுந்தாலே வீதியில் ஒரு வீடு ஏற்பாடு செய்திருக்கிறோம். திரைப்படங்கள் வரவழைத்துப் போடுபவர், அவர் தம் அலுவலகக் கட்டிடத்தை நமக்குப் பதினைந்து நாட்கள் ஒதுக்கித் தர இசைந்திருக்கிறார்." என்றார்கள்.

"வாடகை எவ்வளவு?" என்று கேட்டேன் நான்,

"வாடகை கிடையாது, அவர் பெரியாரிடம் மிகுந்த மரியாதை வைத்திருப்பவர், தன் வீட்டில் பெரியார் தங்குவதைப் பெருமையாகக் கருதுகிறார்" என்றார்கள்.

"சரி, வீடு கீழ்வீடா?, மேல் மாடியா?" நான்,

"கீழ்வீடு தான்! கீழ்வீடாக இருக்க வேண்டும் என்று தானே வீடு தேடிப்புறப்பட்டோம்" என்றார்கள்,

"சரி அங்கேயே போகலாம்!" என்றேன் நான்,

நான்கு தோழர்களும் சீறினார்கள்,

"நாங்கள் முன் பணம் கட்டிப் பிடித்த வீடு என்னாவது" என்று கேட்டார்கள்.

"இருக்கலாம். கீழ் வீடாக இல்லையே! வேண்டாம்" என்றேன் நான்.

"இல்லை, நாங்கள் பெரியாரை அழைத்துச் செல்கிறோம்" என்றார்கள்.

"கீழ் வீடாக ஒன்று கிடைத்திருக்கும் போது, நீங்கள் ஒரு மாடி வீட்டுக்குக் கூப்பிடுகிறீர்கள். இது முதியவரான பெரியாருக்குத் துன்பம் தருவதாக இருக்கும், முன் பணத்தைத் திருப்பி வாங்குங்கள். கிடைக்காவிட்டால், நான் தந்து விடுகிறேன். இப்போது வீண் தொல்லை கொடுக்காதீர்கள்" என்றேன் நான்.

"ஒரு முஸ்லிம் வீட்டுக்குப் பெரியாரை அழைத்துச் செல்ல நாங்கள் அனுமதிக்க முடியாது" என்று அந்த நான்கு பேரும் முழங்கினார்கள்.

திரைப்படத் தொழில் செய்யும் அந்த அன்பர் முஸ்லிம் என்பது அப்போது தான் எனக்குத் தெரியவந்தது. நான் அந்த நான்கு பேரை நோக்கிச் சொன்னேன்.

பெரியார் மீது மரியாதை வைத்து, வாடகையே வேண்டாம் என்று கூறி நமக்காகத் தன் அலுவலக வேலைகளைக் கூட பொருட்படுத்தாமல் தன் வீட்டைத் தர

ஒப்புக் கொண்டார். முஸ்லிம் என்பதற்காக அவர் அன்பைப் புறக்கணிக்க முடியாது. மாடிப்படியேறி வரமுடியவில்லை என்று பெரியார் கூறுவதனால் தான் நாம் வேறு இடம் ஏற்பாடு செய்கிறோம். இல்லாவிட்டால் என் வீட்டிலேயே தொடர்ந்து இருக்கலாம். தயவு செய்து குழப்பம் செய்யாதீர்கள்," என்று வேண்டிக் கேட்டுக்கொண்டு அவர்களை அனுப்பி வைத்தேன்.

வீடு தயாராக இருப்பதாக நண்பர்கள் கூறியதால் அன்று மாலையே பெரியாரை மவுந்தாலே வீதி வீட்டுக்கு அழைத்துச் சென்றோம்.

எங்கள் வாக்கு வாதங்களெல்லாம் அன்று பெரியாருக்குத் தெரியாது.

மறுநாள் புத்த சமய மாநாட்டுக்குச் சென்று வந்தார் பெரியார். மாநாட்டில் பெரியார் 15 மணித்துளிகள் தமிழில் பேசினார். அவர் பேசிய பேச்சின் கருத்தை டாக்டர் அம்பேத்கார் ஆங்கிலத்தில் பேசினார். புத்த சமயத்தின் புதுமைச் செயல்களைப் பாராட்டிப் பெரியார் பேசிய கருத்துக்களை மாநாட்டினர் கேட்டு மகிழ்ந்தனர். பர்மியப் பத்திரிகைகளில் செய்தி வந்தது.

மாநாடு முடிந்தவுடனேயே பெரியார் சிங்கப்பூருக்குப் புறப்பட்டுப் போக விரும்பினார். ஆனால் நாங்கள் கேட்டுக் கொண்டதன் பேரில் ஒரு வாரம் தங்கி நாங்கள் ஏற்பாடு செய்யும் கூட்டங்களில் பேச ஒப்புக் கொண்டார்.

முதலில் ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தோம். வழக்கமாக பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தின் கூட்டங்கள் இராமகிருஷ்ணா மிஷன் நூலகத்தின் சொற்பொழிவுக் கூடத்தில் தான் நடைபெறும்.

பெரியார் பேசுவதற்காக ஏற்பாடு செய்த அந்த நாளில் வேறு கூட்டத்திற்கு அனுமதி வழங்கபட்டதால் வேறுஇடம் தேடிக் கொள்ளச் சொல்லிவிட்டார்கள். அகில பர்மா இந்தியன் காங்கிரஸ் இரங்கூனில் இந்தியப் பிள்ளைகளுக்காக ஒரு பள்ளிக்கூடம் நடத்தினார்கள். அந்த உயர்நிலைப் பள்ளியில் ஒரு சொற் பொழிவுக் கூடம் இருந்தது. அதன் பெயர் கால்சா மண்டபம் அதையே பெரியார் சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்தோம்.

இராமகிருஷ்ணா மிஷன் சொற்பொழிவுக் கூடத்தில் ஆயிரம் பேர் அமரலாம். இந்தியன் காங்கிரஸ் உயர்நிலை பள்ளிக்கூடத்து மண்டபத்தில் 500 பேர்தான் அமரமுடியும். ஒரே நாளில் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்ததால் 500 பேர் வந்தாலே போதும் என்று நினைத்தோம்.

பெரியார் என்னை அழைத்தார். "கூட்டம் எங்கே ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்? திறந்த வெளியிலா? ஏதேனும் மண்டபத்திலா?".

"மண்டபத்தில் தான்!"

"அப்படியானால் கட்டணம் வைக்கலாமே?

"இல்லை இந்த நாட்டுக்குப் புதிதாக வந்திருக்கிறீர்கள். கூட்டம் நிறைய வராது, கூட்டம் சேர வேண்டும் என்றால் கட்டணம் வைக்கக்கூடாது. கட்டணம் வைத்தால் கூட்டம் குறைந்து விடும், வேண்டாம்."

"அப்படியானால் மிகக் குறைந்த கட்டணம் வைக்கலாம், ஒரு ரூபாய் வைத்தால் கூடப் போதும்."

"இல்லை, கட்டணம் வேண்டாம். கூட்டம் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக வருகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு கருத்துப் பரவும்."

"பணம் வேண்டுமென்றால் தனியாக நிதி வசூலித்துத் தருகிறேன். கூட்டத்திற்குக் கட்டணம் வைக்கத் தேவையில்லை" என்று நான் மறுத்து விட்டேன்.

மேலும் என்னை வற்புறுத்தவில்லை பெரியார்.

கால்சா மண்டபத்தில் கூட்டம் தொடங்கியது.

தோழர் சேரன் தலைமையில் பெரியார் சிறப்புச் சொற்பொழிவு செய்வதாக விளம்பரம் செய்திருந்தோம்.

தோழர் சேரன் தலைமையுரை தொடங்கினார். மண்டபத்தின் வாசல்பக்கம் ஒரே கூச்சலும் குழப்பமுமாக இருந்தது.

நான் மேடையில் பெரியாருக்கு அருகில் உட்கார்ந்திருந்தேன். மேடைக்கு வந்த ஒரு தோழர் என்னைத் தனியாக அழைத்தார்.

"எந்த நேரமும் கலகம் உருவாகலாம், மண்டபத்தின் வாசலில் ஒரே ரகளையாக இருக்கிறது." என்றார்,

"என்ன காரணம்?" என்றேன்.

"உள்ளே நுழைய முயற்சி! உள்ளே கூட்டம் நிறைந்து விட்டது. வெளியில் நிற்பவர்கள் அனைவரும் உள்ளே வரமுயல்கிறார்கள்."

"இவ்வளவு தானா? நான் ஏதோ மாற்றுக் கட்சிக்காரர்களின் கலக முயற்சியோ என்று பயந்துவிட்டேன். உடனே போலிஸ் உதவி கேட்டுப் போன் செய்யலாமா?" என்று கேட்டேன் நான்.

"அவர்கள் வரும் வரை தாங்காது. கூட்டம் அலைமோதிக் கொண்டிருக்கிறது" என்றார் நண்பர்.

"வெளியில் எத்தனை பேர் இருப்பார்கள்?"

"இரண்டாயிரம் பேர் இருக்கலாம். அதற்கு மேலும் இருக்கலாம்"

"அவ்வளவு கூட்டமா?"

வியப்புடன் கேட்டேன். சட்டென்று எழுந்தேன்.

ஒலிபெருக்கியை நோக்கி ஓடினேன். தலைமை உரையாற்றிக் கொண்டிருந்த தோழரைக் கையைப் பிடித்து இழுத்தேன்.

ஒலிபெருக்கியைப் பிடித்துக் கொண்டேன்.

"தமிழ்ப் பெருமக்களே! மண்டப வாயிலில் கூடியிருக்கும் அன்பர்களே! உங்களுக்கெல்லாம் ஒரு வேண்டுகோள்.

நம் தலைவர் தந்தை பெரியார் அவர்களை நீங்களெல்லாம் காணவும், அவர் பேச்சைக் கேட்கவும் ஆசைப்படுகிறீர்கள் புரிகிறது. இந்த மண்டபத்தில் கூட்டம் நிறைந்து விட்டது. வெளியில் உள்ள நீங்கள் உள்ளே வந்து நிற்கக் கூட இடமில்லை. இந்நிலையில் உங்களையெல்லாம் நான் வேண்டிக் கொள்கிறேன். வீதிப் பிளாட்பாரத்தில் அப்படியே உட்கார்ந்து விடுங்கள் பெரியார் பேச்சை அமைதியாகக் கேளுங்கள். பெரியார் பேசி முடிந்தவுடன் மண்டபத்திற்கு வெளியே உங்கள் மத்தியிலே பெரியார் அவர்கள் பதினைந்து நிமிடம் வந்து நின்று காட்சி தருவார் ஆசை தீரப் பார்க்கலாம் அன்போடு பார்க்கலாம், யார் வேண்டுமானாலும் நெருங்கிப் பேசலாம்.

ஆகவே பெருமக்களே! பெருமக்களே! அமைதியாக உட்காருங்கள் மண்டபத்திற்குள் வெளிக்காற்று வர வேண்டும். ஆகவே வாயிலை அடைத்துக் கொண்டு நிற்காமல் வழிவிட்டு ஒதுங்கி உட்காருங்கள். அன்போடு பணிவோடு உங்கள் அனைவரையும் வணங்கிக் கேட்டுக்

கொள்கிறேன். என் குரல் உயர உயர வெளியில் அமைதி நிலவியது, அத்தனை பேரும் உட்கார்ந்து விட்டார்கள்.

கழகத் தோழர்கள் வியப்படைந்தார்கள். ஒரு பெரிய நெருக்கடி ஏற்பட்டுக் கூட்டம் நடத்த முடியாமல் போய்விடுமோ என்று அஞ்சிய அவர்கள் என் கட்டளைக்குப் பணிந்து இரண்டாயிரம் தமிழ்ப் பெருமக்கள் அமர்ந்துவிட்ட காட்சி கண்டு பெருமிதம் அடைந்தார்கள். கட்டுப்பாடு என்றால் அதற்கு இது நல்ல எடுத்துக்காட்டு என்றார்கள்.

வெளியில் அமைதி ஏற்பட்டு விட்டது என்ற உடனே, தலைமையுரை ஆற்றிய தோழரைத் தொடர்ந்து பேசச் சொல்லிவிட்டு பெரியார் அருகில் போய் அமர்ந்தேன்.

பெரியார் என் பக்கம் குனிந்தார்.

"கூட்டத்தைச் சமாளிக்கத் தெரிந்து வைத்திருக்கிறாய். ஆனால் ஒரு தவறு செய்து விட்டாய். ஐந்து ரூபாய் டிக்கெட் வைத்திருந்தால் பத்தாயிரம் ரூபாய் சுலபமாகக் கிடைத்திருக்கும். கோட்டை விட்டு விட்டாய்" என்றார்.

அதுதான் பெரியாருக்காக நாங்கள் ஏற்பாடு செய்த முதல் கூட்டம். பெரியார் தன்மானக் கொள்கைகளை விளக்கித் தனக்கே உரிய பாணியில் மிக அருமையாகச் சொற்பொழிவாற்றினார். கட்சியரசியலையே தொடாமல் அன்று அவர் பேசியது தமிழ் மக்கள் அனைவருக்கும் மகிழ்ச்சி தருவதாக இருந்தது. கடவுள் எதிர்ப்பு, மத எதிர்ப்பு, சாதி எதிர்ப்பு, போன்ற தன்மானக் கருத்துக்களையே இரண்டு மணிநேரம் பேசினார்.

கூட்டம் முடிந்த பிறகு பெரியாரை ஒரு ஜீப்பில் நிற்க வைத்து வெளியில் இருந்த கூட்டத்தின் மத்தியில் பேச வைத்தோம்.

பர்மா வாழ் தமிழ் மக்கள் கட்டுப்பாடாகவும், ஒற்றுமையாகவும் நேசமை உணர்வோடும் வாழ வேண்டும். பர்மிய மக்களோடு சரிநிகர் சமானமாகப் பழக வேண்டும. பர்மிய நாட்டின் நலத்திற்கு ஊறு தராத வகையில் வாழ்வை அமைத்துக்கொள்ள வேண்டும் என்றெல்லாம் பதினைந்து நொடிகள் பேசி அத்தனை பேரும் பெரியார் வாழ்க! என்று முழங்கி வாழ்த்த அங்கிருந்து புறப்பட்டார்.

பெரியாரை மவுந்தாலே வீதியில் கொண்டு போய்ச் சேர்த்த பின் சிறிது நேரத்தில் நான் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

யாழ்ப்பாணத் தமிழரான துரைப்பிள்ளை என்ற பெரியவரிடம் நான் வேலை பார்த்தேன். கப்பல்களுக்கு உணவுப் பொருள்கள் வழங்கும் நிறுவனம் நடத்தி வந்தார் அவர். நான் அங்கு கணக்கர் வேலை பார்த்தேன்.

கணக்கர் என்றால் மேசையில் உட்கார்ந்து கணக்கெழுதுவது அல்ல என் வேலை. முழு நேர உழைப்பு. காலை 6 மணிக்கு மார்க்கெட்டுக்குச் செல்ல வேண்டும். கப்பலுக்கு வேண்டிய காய்கறிகள், மீன், இறைச்சி வகைகள், போன்றவற்றை 7 மணிக்குள் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். சிலநாட்களில் ஒரு கப்பலில் மட்டுமே வேலையிருக்கும், சில நாட்களில் 5 அல்லது ஆறு கப்பல்களுக்குச் செல்ல வேண்டும். சில கப்பல்கள் துறைமுகத்தில் நிற்கும். சில கப்பல்கள் துறைமுகத்தில் இடம் கேட்டுக் காத்துக் கொண்டு ஆற்றின் நடுவில் நிற்கும், சில சமயம் ஆற்றில் நிற்க இடம் கிடைக்காமல் கடல் நுழைவாயிலிலேயே நிற்பதும் உண்டு. எங்கு கப்பல்

நிற்கிறதோ அங்கு உணவுப் பொருள் போய்ச் சேர வேண்டும். அதுவும் 7 மணிக்குள் போய்ச் சேர வேண்டும். அத்தனையும் பார்க்க வேண்டியது என் பொறுப்பு.

கப்பல்களுக்குப் போய்த் திரும்ப பத்துமணியாகி விடும், பிறகு, கப்பல் தலைவர்கள் கேட்ட பொருள்களில் சுங்க அலுவலக அனுமதி பெற்று வழங்க வேண்டிய பொருள்கள் இருக்கும். அரிசி, பருப்பு போன்ற பொருள்கள் சுங்கத்துறை அனுமதியுடன் தான் கப்பலுக்கு வழங்க வேண்டும். அவற்றைப் பங்கீட்டு முறையில் தான் வழங்குவார்கள்.

கப்பலில் வேலை செய்யும் ஆட்கள், பயணிகள் இவர்களின் எண்ணிக்கைப் பட்டியலும், கப்பல் துறைமுகத்தில் நிற்க எண்ணியிருக்கும் நாட்கள் பற்றிய சான்றிதழும் கொடுத்து அப்பொருள்களைப் பெற வேண்டும்.

அதற்குரிய ஆணையுடன் தான் கப்பலில் பொருள்களை ஏற்ற முடியும். 10.30 மணி முதல் 2 மணி வரை அந்த வேலைகளைக் கவனிக்க வேண்டும். ■ மணியளவில் வேலைகளை முடித்துக் கொண்டு, அதற்கு மேல் பெரியார் கூட்ட நிகழ்ச்சிகளில், நானும் கலந்து கொள்வேன், மற்ற தோழர்கள் ஒத்துழைப்பு பெரிதும் இருந்ததால் நான்கு ஐந்து மணி நேரம் மட்டும் நான் பெரியாருடன் இருப்பது போதுமானதாக இருந்தது.

பெரியார் கூட்டங்களில் நான் சிறப்புப் பங்கெடுத்துச் செயல் படுவது பற்றி என் முதலாளி யறிந்தார்.

என் முதலாளி துரைப்பிள்ளை மிகுந்த பக்தியுடையவர். சாதி சமய வேறுபாடில்லாமல் எல்லாத் தெய்வங்களையும்

வணங்குபவர். பிள்ளையார் கோயிலுக்கும் போவார். அனுமார் கோவிலுக்கும் போவார். சர்ச்சுக்கும் போவார், மசூதிக்கும் செல்வார், வீட்டில் அவர் பூசையறையில் நூறு படங்கள் இருக்கும். அத்தனையும் துடைத்துப் பொட்டு வைத்துப் பூ வைத்துப் பூசை செய்து முடிக்க ஒரு மணி நேரம் ஆகும். எந்த அலுவலகத்துக்குச் சென்றாலும் அலுவலக வாயிலில் இரண்டு நிமிடம் நின்று பிரார்த்தனை செய்து விட்டுத்தான் படி ஏறுவார்.

அப்படிப்பட்ட அவர் என்னை அழைத்தார். "பெரியார் கூட்டங்களை நீதான் நடத்துகிறாயாமே?" என்று கேட்டார்.

"ஆமாம்!" என்றேன்.

என்னைக் கண்டிக்கப் போகிறாரோ; போகக் கூடாது என்று கட்டளையிடப் போகிறாரோ என்று நான் நினைத்துக் கொண்டிருந்த போது,

"உன்னை நான் தடுக்கப் போவதில்லை. உன் சுதந்திரத்தில் நான் தலையிடப் போவதில்லை, ஆனால், என் வேலைக்கு ஊறு நேராமல் பார்த்துக் கொள்" என்றார். அவர் பெருந்தன்மையை எண்ணி மன மகிழ்ந்தேன்.

அவர் அனுமதியோடு மாலை 5 மணி முதல் பெரியார் உடன் செல்லும் வேலையில் ஈடுபட்டேன்.

ஒருநாள் மாலை 5 மணிக்குப் பெரியாரைச் சந்திக்கப் போனேன்.

இரங்கூன் நகரில் பெரிய வணிகர்களான 4 முஸ்லிம் பெரியோர்கள் அங்கே காத்துக் கொண்டிருந்தார்கள்.

நான் சென்ற உடனே, அவர்கள் என்னை அணுகி "நாளை நபிகள் நாயகம் பிறந்தநாள், பெரியார் கலந்து கொள்ள வேண்டும். அதற்கு அனுமதி வாங்க வந்திருக்கிறோம்" என்றார்கள்.

"பெரியாரிடமே கேட்கலாமே!?" என்றேன்.

"கேட்டு விட்டோம்; உங்கள் ஒப்புதல் வேண்டும் என்கிறார் பெரியார். அதற்காகத்தான் மூன்று மணியிலிருந்து காத்திருக்கிறோம்,"

"நான் நேராகப் பெரியாரிடம் சென்றேன். அய்யா நீங்கள் நபிகள் நாயக விழாவில் எத்தனையோ முறை கலந்து கொண்டிருக்கிறீர்கள். இப்போது மறுப்பதற்குக் காரணம் என்ன?" என்றேன்.

"மறுக்கவில்லை. இரங்கூனில் இருக்கும் வரை. எந்த நிகழ்ச்சிக்கும் உன்னுடைய ஒப்புதல் இல்லாமல் நான் ஒப்புக் கொள்ளப் போவதில்லை. இங்குள்ளவர்கள் எனக்குப் புதியவர்கள். உனக்கு அவர்களைப் பற்றித் தெரிந்திருக்கும். ஆகவே, எதையும் உன் மூலமாகவே செய்வது பாதுகாப்பாய் இருக்கும் அல்லவா?" என்றார் பெரியார்.

"எனக்கும் அவர்கள் தெரிந்தவர்கள் இல்லையே!" என்றேன் நான்.

"நீ சொன்னால் நான் அவர்களுக்கு ஒப்புதல் கொடுப்பேன், வேண்டாம் என்றால் விட்டுவிடுவோம்" என்றார் பெரியார்.

"பெரிய மனிதர்கள் வந்திருக்கிறார்கள், நமக்கு ஒருநாள் கூட்டச்செலவு மிச்சம். நபிகள் விழாவிலும் பெரியார் தன்மானக் கருத்துக்களைத் தான் பேசப் போகிறார்" என்று முடிவெடுத்து, "ஐயா ஒப்புக் கொள்ளுங்கள்" என்றேன்.

முஸ்லிம் பெரியவர்கள் மகிழ்ச்சியுடன் திரும்பினார்கள். மறுநாள், மிகப் பெரிய கூட்டம் ஒன்று நடந்தது. பெரியார் வழக்கம்போல் நபிகள் நாயகத்தின் புதிய

கருத்துக்களைப் பாராட்டி இந்து மதத்தில் உள்ள மூடப் பழக்கவழக்கங்களைச் சுட்டிக்காட்டிப் பேசி முடித்தார். கூட்டம் அமைதியாக நடந்து முடிந்தது.

"நான் கடவுள் நம்பிக்கை யற்றவன். நீங்கள் கடவுள் நம்பிக்கை யுடையவர்களாய் இருப்பதுபற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் நீங்கள் வணங்கும் கடவுள் யோக்கியமான கடவுளாய் இருக்கட்டும்.

"யோக்கியமான கடவுளை வணங்குபவனிடம் தான் யோக்கியனாய் இருக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்ற முடியும்"

இந்த அளவில் தான் பெரியார் கடவுள் கொள்கைக்கு ஆதரவு கொடுத்தார். ஒரு கடவுள் கொள்கையுடைய முஸ்லிம்கள் கொண்டாடும் நபிகள் நாயகம் பிறந்த நாள் விழாவில் கலந்து கொள்ளும் போதெல்லாம் இந்த அடிப்படையில் தான் அவருடைய பேச்சுக்கள் அமையும்.

முஸ்லிம்களிடையே உள்ள சில மூடப் பழக்க வழக்கங்களையும், காலத்துக் கொவ்வாத பழக்கங்களையும் அவர் கண்டிக்கவும் பின் வாங்கியதில்லை.

பெரியாரின் சொற்பொழிவு முழுவதும் சொல்லுக்குச் சொல் அப்படியே மறுநாள் 'தொண்டன்' நாளிதழில் வெளி வந்தது.

"தொண்டன்" பர்மா வாழ் முஸ்லிம்களின் இலட்சிய இதழாக விளங்கியது. அதன் ஆசிரியர் இபுராகிம் புது நோக்குடையவர். பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தின் பிரசாரங்களுக் கெல்லாம் முழு ஆதரவு அளித்து வந்தவர். கழகச் செய்திகளை அவ்வப்போது வெளியிட்டு ஆதரவு அளித்து வந்தார்.

"ரசிக ரஞ்சனி" என்று ஒரு தமிழ் நாளிதழ் இரங்கூனிலிருந்து வெளி வந்து கொண்டிருந்தது. தமிழ் மக்களின் பொதுவான பத்திரிகை என்று சொல்ல முடியாதபடி அது மதவெறி இதழாக வெளிவந்தது. அந்த இதழில், பெரியார் கலந்து கொண்ட மற்ற நிகழ்ச்சிகளைப் பற்றி ஒரு சிறு குறிப்புக் கூட வெளி வரவில்லை.

உலக புத்தசமய மாநாட்டில் பெரியார் கலந்து கொண்ட நிகழ்ச்சியைக் கூட அது வெளியிடவில்லை. ஆனால் நபிகள் நாயகம் பிறந்த நாள் கூட்டத்தில் பெரியார் பேசிய பேச்சை அந்த இதழ், மதவெறி நோக்கோடு வெளியிட்டிருந்தது. மதவெறியைக் கிளப்பி இந்து முஸ்லிம் பகைமையை வளர்க்கும் நோக்குடன் அது செய்தியைத் திரித்து வெளியிட்டது.

தலைப்பிலேயே கொட்டை எழுத்துக்களில் முஸ்லிம்கள் கூட்டத்தில் இந்து மதத்தைத் தாக்கிப் பிரசங்கம் என்று போட்டிருந்தது.

தமிழ் நாட்டிலிருந்து வந்திருக்கும் ராமசாமி நாயக்கர் நபிகள் நாயகம் பிறந்த நாள் விழாவில் இந்துமதத்தைத் தாக்கிப் பேசினார். இதனால் இந்து மதத்தவர்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள்.

இப்படியிருந்தது அதன் செய்திப் போக்கு.

சாதி, மத வெறிகளைக் குழி தோண்டிப் புதைக்கத் தன்வாழ்வையே ஈடுபடுத்திக் கொண்ட அண்ணல் பெரியார் மதக் கலவரத்தை மூட்ட வந்திருக்கிறார் என்ற தோரணையில் அது வெளியிட்டிருந்தது.

அந்தச் செய்தியின் பலனாகச் சில எதிர் விளைவுகள் ஏற்பட்டன.

மறுநாள் இரங்கூன் ஆற்றின் எதிர்கரையில் உள்ள லான்மடோ என்ற சிற்றூரில் உள்ள கழகத்தோழர்கள் பெரிய கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். பெரியார் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுவதாக இருந்தது.

வழக்கம்போல் [illegible] [illegible] மணிக்கு பெரியாரைப் பார்க்கச் சென்றேன், பெரியாருடன் ஆற்றின் அக்கரைக்குப் போக விசைப்படகு (Motor Launch) ஏற்பாடு செய்து வைத்திருந்தோம்.

நான் பெரியாரைப் பார்த்தவுடனே, அவர் "இனிமேல் கூட்டம் எதுவும் நடத்த வேண்டாம்" என்றார். அன்றைய கூட்டத்திற்கும் வர மறுத்துவிட்டார். அக்கரைத் தோழர்கள் வருத்தத்துடன் தெருவில் நின்று கொண்டிருந்தார்கள்.

"ஏன் வேண்டாம் என்கிறீர்கள்" என்று கேட்டேன்.

"காலையில் ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டர் வந்திருந்தார். புத்தமத மாநாட்டிற்காக உங்களை இந்த அரசு பெரிதும் மதித்து வரவேற்றிருக்கிறது. இந்து முஸ்லிம் கலவரத்தைத் தூண்டும் வகையில் தங்கள் நடவடிக்கைகள் இருப்பதாகவே அரசு கருதுகிறது ஆனால் விருந்தாளியாக வந்திருக்கும் தங்களை வெளிப்படையாகக் கண்டிக்க அரசு விரும்பவில்லை. ஆகவே என்னைத் தங்களிடம் அனுப்பி, தாங்கள் மேற்கொண்டு எந்தக் கூட்டத்திலும் கலந்து கொள்ளாதவாறு வேண்டிக் கொள்ளும்படி அரசு பணித்திருக்கிறது" என்று அந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கூறினாராம்.

பெரியார் இந்த நிகழ்ச்சியைக் கூறினார்,

"அய்யா, இன்று கழகத் தோழர்கள் பெருமுயற்சி செய்து இந்தக் கூட்டத்தைக் கூட்டியிருக்கிறார்கள். நீங்கள் வராவிட்டால் அவர்கள் ஆர்வமே போய் விடும். ஆகவே, ஏற்பாடாகிவிட்ட இந்தக் கூட்டத்துக்கு மட்டும் வாருங்கள், நாளைமுதல் வேறு கூட்டங்கள் ஏற்பாடு செய்யவில்லை" என்று நான் கூறினேன்.

"இன்றைய கூட்டத்திலேயே கலந்துகொள்ள வேண்டாம் என்று அந்த இன்ஸ்பெக்டர் குறிப்பாகச் சொல்லியிருக்கிறார். இன்று நான் கலந்து கொண்டு பேசி நாளைச் சென்னைக்குச் சென்றுவிடுவேன். அதன் எதிர் விளைவுகள் உங்களை யல்லவா பாதிக்கும். என்னால் இங்கு பிழைக்க வந்த நீங்கள் அவதிப்படுவதை நான் விரும்பவில்லை" என்று கண்டிப்பாக மறுத்து விட்டார்.

பெரியார் கூட்டத்திற்கு வருவதில்லை என்று உறுதியாக இருந்தார்.

வெளியே கழகத் தோழர்கள் – குறிப்பாக அக்கரைத் தோழர்கள் குமுறிக் கொண்டிருந்தார்கள்.

நான் வெளியில் வந்தேன். தோழர்களைச் சந்தித்தேன். என்ன செய்யலாம் என்று சிந்தித்தோம்.

அரசு தடை விதித்தால் ஓர் எச்சரிக்கைக் குறிப்பாவது அனுப்பியிருக்கும். இது ரசிகரஞ்சனிக்காரன் செய்த சூழ்ச்சியாகத் தான் இருக்கும். ஆனால் வந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மிகப் பக்குவமாகப் பெரியாரிடம் பேசியிருக்கிறார். பெரியாரும் நம்மீது உள்ள அக்கறையால் மறுக்கிறார். பெரியாரை இது பொய் யென்று நம்ப வைப்பதற்கு என்ன வழி என்று ஆராய்ந்தோம்.

துறைமுகப் பகுதியில் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக இருப்பவர் ஊராமா. அவரை எங்களுக்குத் தெரியும், அவரைப் போய்ப் பார்க்கிறோம் என்றார் ஒரு தோழர்.

உடனே ஒரு வாடகை ஜீப்பில், நான்கு தோழர்கள் துறைமுகக் காவல் நிலையம் நோக்கிப் பறந்தார்கள்.

கூட்டம் ஏற்பாடு செய்திருப்பதையும் பெரியார் வர மறுப்பதையும் விளக்கமாகக் கூறினார்கள். அவரே நேரில் வந்து பெரியாரிடம் பேச வேண்டும் என்று கூப்பிட்டார்கள்.

ஊராமா, தமிழ் வணிகர் ஒருவரின் பர்மிய மனைவிக்குப் பிறந்தவர். பர்மியக் குடிமகனாக இருந்தாலும் தமிழர் நலனில் அக்கறை கொண்டவர், எல்லாவற்றையும் விவரமாகக் கேட்டுக் கொண்டார். உடனே தோழர்களோடு பெரியார் தங்கியிருக்கும் இடத்திற்குப் புறப்பட்டு வந்தார்.

தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார். பெரியாருக்கு பர்மிய அரசு எந்தத் தடையும் விதிக்கவில்லை. இரகசியமாகக்கூட எதுவும் செய்யவில்லை என்று எடுத்துக் கூறினார். இந்து மதவெறி கொண்ட சிலர் அயம்பது ரூபாய் இலஞ்சங்கொடுத்து ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டரை அனுப்பி வைத்திருக்கிறார்கள் என்றே தாம் நினைப்பதாகக் கூறினார்.

பெரியார் மேலும் பல கூட்டங்களில் பேசலாம் என்றும் அன்றைய கூட்டத்திற்கு தானே தலைமை வகித்து நடத்திக் கொடுப்பதாகவும், தான் எவ்விதக் கலகமும் ஏற்படாமல் போலீஸ் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்வதாகவும் கூறினார். அதன் பிறகு பெரியார் புறப்பட்டு வந்தார்.

அக்கரையில் அன்றைய கூட்டம் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஊராமா தலைமையில் நடந்தது. நானும் சில தோழர்களும் பேசியபின் பெரியார் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

இன்றைய மதவெறியாளர்களின் சூழ்ச்சிகளை முறியடித்துப் பெரியாரைப் பேச அழைத்து வந்தோம். அவரோ பெருவாரியான மக்களை அழுத்தி வைத்திருக்கும் வருணா சிரம தருமத்தை வகுத்த மனுநீதியின் சூழ்ச்சிகளையும் வேத புராணங்களின் சூழ்ச்சிகளையும் விளக்கிப் பேசினார்.

தொடர்ந்து கூட்டங்கள் நடந்தன. 'ரசிக ரஞ்சனி' கும்பல், தங்கள் சூழ்ச்சி பலிக்காததை எண்ணிப் புழுங்கியது.

அந்தப் புழுக்கத்தின் காரணமாகத் தொடர்ந்து பெரியார் கூட்ட நிகழ்ச்சிகளை மதக் கலவரத்தைத் தூண்டும் பேச்சுக்களாக வருணித்துச் செய்திகளைத் திரித்து வெளியிட்டு வந்தது.

# மோல்மேன் பயணம்

இரங்கூன் பர்மாவின் தலைநகரம். பர்மாவின் நடுமையத்தில் உள்ள மாந்தலே அந்தக் காலத்துத் தலைநகரம்; பர்மாவில் பழங்காலத்தில் பல அரசுகள் இருந்தாலும், மாந்தலேயைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசுதான் பேரரசாக விளங்கியது.

பர்மாவில் குறிப்பிடத்தக்க மூன்றாவது பெரிய நகரம் மோல்மேன்.

மோல்மேன் நகருக்குள்ள சிறப்பு அது ஓர் ஆற்றுத் துறைமுகமாகும். ஐராவதி நதிக்கரையில் உள்ளது மாந்தலே நகரம். ஐராவதி ஆற்றின் கிளையாறாகிய இரங்கூன் ஆறு கடலோடு கலக்கும் இடத்தில் உள்ளது இரங்கூன் நகரம். அதுபோல சால்வீன் ஆறு கடலோடு கலக்கும் இடத்தில் உள்ளது மோல்மேன் நகரம்.

இரங்கூன் ஆறு ஆழமானது. ஆகையால் கப்பல்கள் இரங்கூன் ஆற்று வழியாக நகருக்குள் வந்துவிடும்.

சால்வீன் ஆற்றின் ஆழம் குறைவாக இருப்பதால், கப்பல்கள் வருவதில்லை. வரும் கப்பல்கள் கடலிலேயே நங்கூரம் பாய்ச்சி நின்றுவிடும். கப்பலிலிருந்து சரக்குகள் மோட்டார்ப் படகுகள் மூலமே கொண்டு வரப்படும், ஏற்றுமதியும் அவ்வாறே.

இத்தகு சிறப்பு வாய்ந்த மோல்மேன் நகரில் என் தந்தையார் தொழில் நடத்திவந்ததால், நான் அங்கு சில நாட்கள் தங்கியிருந்ததுண்டு. அடிக்கடி போய் வந்ததும் உண்டு.

அங்கு எனக்குப் பழக்கமான நண்பர் ஒருவர் ஒருநாள் என்னைத் தேடி வந்தார்.

பர்மாவுக்குப் பெரியார் வந்திருப்பதறிந்த மோல்மேன் நகர இந்திய மக்கள். பெரியாருக்கு வரவேற்புக் கொடுக்க விரும்புவதாகவும். அவரை அழைத்துப் போகவே தான் வந்திருப்பதாகவும் கூறினார்,

எனக்குப் பழக்கமானவர் என்பதாலும். நகரத்தார் இனத்தைச் சேர்ந்தவர் என்பதாலும், அவரை நான் நம்பினேன்.

மேலும், மோல்மேன் வாழ் இந்தியப் பெருமக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து வரவேற்புக் கொடுக்க முடிவு செய்திருப்பதாக அவர் கூறிய போது எனக்குப் பெருமையாக இருந்தது.

இரங்கூனில் இருந்த அத்தனை இந்திய இனத்தவர்களும் என் வீட்டைத் தேடி வந்து பெரியாரைப் பெருமைப் படுத்தியதைக் கண்ணாரக் கண்டவன் நான்,

மோல்மேனில் உள்ள அனைத்து இந்திய இனத்தவர்களும். என் அன்புப் பெரியாருக்கு வரவேற்புக் கொடுக்கப்போகும் அந்த மகத்தான காட்சியை எண்ணிப் பார்த்து நான் பெரு மகிழ்ச்சி கொண்டேன்.

அந்த நண்பரை அழைத்துக் கொண்டு பெரியாரிடம் சென்றேன்,

மோல்மேன் நகருக்கு அவர் அழைக்க வந்திருக்கும் செய்தியைக் கூறிப் பெரியாரின் ஒப்புதலைக் கேட்டேன்.

"நீயும் கூட வருகிறாயா?" என்று பெரியார் கேட்டார்.

என் இயலாமையை அவரிடம் விளக்கிக் கூறினேன். தொழிலில் உள்ள கடமையை எடுத்துச் சொன்னேன்.

"அப்படியானால் மோல்மேனுக்குப் போக வேண்டாம்!" என்று பெரியார் மறுத்துவிட்டார்.

வந்தவர், அன்றே புறப்படுவதாக இருந்தால், தானே உடன் அழைத்துச் செல்வதாகக் கூறினார்.

பெரியார் அதற்கும் மறுத்துவிட்டார்.

மோல்மேனில் ஒரு சிறப்பு நிகழ்ச்சியை நடத்த வாய்ப்பிருக்கும்போது அதைக் கைவிடுவது எனக்குப் பிடிக்கவில்லை.

நான் பெரியாரை வற்புறுத்தி ஒப்புக் கொள்ளச் செய்தேன்.

இரங்கூன் நிகழ்ச்சிகள் இரண்டொன்றை முடித்துக் கொண்டு மூன்றாவது நாள் மோல்மேனுக்குப் புறப்படுவதாக முடிவு செய்யப்பட்டது.

உடனிருந்து அழைத்துச் செல்வதாகக் கூறிய அந்த நண்பர், அன்று மாலையே மூன்றாவது நாள் புறப்படும் விமானத்துக்கு மூன்று சீட்டுகள் பதிவு செய்து சீட்டுகளை என்னிடம் கொடுத்து விட்டு அவர் அன்றைக்கே மோல்மேனுக்குப் புறப்பட்டுப் போய்விட்டார்.

பயணச்சீட்டுகளை நான் பெரியாரிடம் கொடுத்தேன்.

"வந்தவர் இருந்து கூட்டிச் செல்லவில்லை. நீயும் வரவில்லை. மொழி தெரியாத ஊரில் நாங்கள் தனியாகப் போவது சரியில்லை. இந்தச் சீட்டுகளைக் கொடுத்து

பணத்தைத் திரும்ப வாங்கிவிடு" என்று மீண்டும் மறுத்துரைத்தார் பெரியார்.

"இங்கே விமானத்தில் நான் கூட வந்து ஏற்றி விடுகிறேன். வந்தவர் மோல்மேனில் விமானத் திடலுக்கே வந்து உங்களை அழைத்துச் செல்வார். இடையில் நாற்பது நிமிடம் தான்" என்று கூறிப் பெரியாரை வற்புறுத்தி மோல்மேனுக்கு அனுப்பி வைத்தேன்.

உலக அனுபவங்கள் முழுவதும் அடைந்திருந்த அந்த முதுபெரும் அறிவின் செல்வர், அனுபவம் சிறிதும் இல்லாத என் வற்புறுத்தலுக்கு இணங்கிக் கடைசியாக மோல்மேன் செல்ல ஒப்புக் கொண்டார்.

பெரியார், தோழர் இராசாராம், மணியம்மையார் ஆகிய மூவரும் நாங்கள் வழியனுப்ப விமானத்தில் ஏறி மோல்மேனுக்குச் சென்றார்கள்.

அங்கே நடந்த நிகழ்ச்சி, அனுபவம் இன்மையால் நான் முடிவெடுத்த மடமையை எடுத்துக் காட்டுவதாக அமைந்தது.

காலையில் ஆறு மணிக்கு நாங்கள் 50 பேர் பெரியாரை வழியனுப்பி வைத்தோம். 6–40க்கு மோல்மேனில் பெரியார் விமானத்தை விட்டு இறங்கிய போது அவரை வரவேற்க யாரும் வரவில்லை.

என் நகரத்தார் நண்பர் தலைகாட்டவே இல்லை.

மோல்மேன் விமானத் திடல் நகரிலிருந்து ஐந்து கல் தொலைவில் ஒரு காட்டின் நடுவில் உள்ளது.

வெறுங் கட்டாந் தரையான ஒரு சிறு திடல்தான் விமானம் இறங்கும் இடம்.

விமானத்தை விட்டு இறங்கியவர்களும் வரவேற்க வந்தவர்களும் தவிர வேறு மனிதர் சந்தடியே இல்லாத இடம்.

நிலைமையைப் பார்த்த பெரியார், உடனே அந்த விமானத்திலேயே இரங்கூன் திரும்பிவிட முடிவு செய்தார்.

விமானத்தில் இடம் இல்லை என்று தெரிவித்து விட்டார்கள்.

பத்தாவது நிமிடம் அங்கு ஏறிய பயணிகளுடன் விமானம் புறப்பட்டு விட்டது.

இறங்கிய பயணிகளும், வரவேற்க வந்த உறவினர்களுடன் கார்களில் புறப்பட்டுச் சென்று விட்டார்கள்.

ஒரே ஒரு வாடகை ஜீப் மட்டும் நின்றது. அதன் ஓட்டுநர் பர்மியர்.

அவரே வலிய வந்து "வருகிறீர்களா!" என்று பர்மிய மொழியில் கேட்டார்.

ஆங்கிலம் தெரியாத அவரிடம் இராசாராம் ஏதோ கேட்க அவர் மொழி புரியாமல் தவிக்க, ஒரு குழப்பமான சூழ்நிலை நிலவியது.

அந்த நேரத்தில் மூன்றுபேர் அரக்கப் பரக்க விமானத் திடலை நோக்கி வந்தார்கள்.

"ஐயா வணக்கம்" என்று [illegible] கூப்பிப் பெரியாரை வணங்கினார்கள்.

அவர்கள் கையில் ஒரு துண்டறிக்கை!

அதை இராசாராம் வாங்கிப் படித்தார்.

மோல்மேன் நகர இந்திய மக்கள் அனைவரும் ஒருங்கிணைந்து பெரியாருக்கு பிரம்மாண்ட வரவேற்புக் கொடுப்பதாகவும், சாதிமத வேற்றுமை பாராட்டாமல் இந்நிகழ்ச்சியில் அனைவரும் கலந்து கொள்ள வேண்டும்

என்றும் இந்திய மக்களை அன்புடன் அழைத்தது அந்த அறிக்கை.

"வரவேற்பாளர்கள் எல்லாரும் எங்கே?" என்று பெரியார் கேட்டார்.

"அவர்கள் வர மாட்டார்கள்?" இது அந்த மூன்று தமிழ் இளைஞர்களின் பதில்.

"அந்தச் செட்டியார் எங்கே?"

"இரங்கூனுக்கு வந்து உங்களை அழைக்க வந்தவரா? அவரும் வரமாட்டார்!"

"ஏன்?"

நேற்று வந்த "ரசிகரஞ்சனி" பத்திரிகையில் நீங்கள் இரங்கூனில் இந்து மதத்தைத் தாக்கிப் பேசியதாகவும், இதனால் மதக் கலவரம் ஏற்படக் கூடிய சூழ்நிலையிருப்பதாகவும், முதல் பக்கம் கொட்டை எழுத்தில் செய்தி போட்டிருக்கிறார்கள்.

அதைப்பார்த்த பலர் உங்களுக்கு வரவேற்புக் கொடுத்தால் பெரும் கலவரம் செய்வதாக அச்சுறுத்தியதால், வரவேற்புக் குழுவினர் பயந்துபோய் விட்டார்கள். அந்தச் செட்டியாரும் பயந்து போய் ஒதுங்கி விட்டார்.

"அந்த ஆள் இங்கே வந்து செய்தியைச் சொல்லி எங்களைத் திருப்பி அனுப்பி இருக்கலாம் அல்லவா?"

அமைதி நிலவியது.

"நீங்கள் யார்?

"நாங்கள் ஆதி திராவிடர்கள். இங்கே கூலி வேலை செய்து பிழைக்கிறோம். பர்மா திராவிட முன்னேற்றக் கழகத்தின் உறுப்பினர்கள். அய்யாவைப் பார்ப்பதற்காக வந்தோம். சிறிது தாமதமாகி விட்டது."

"சரி நாங்கள் உடனே இரங்கூனுக்குத் திரும்பிப் போவதற்கு ஏதாவது ஏற்பாடு செய்யுங்கள்."

"அய்யா நகருக்குள் சென்று தான் எல்லா ஏற்பாடும் செய்யவேண்டும் ; விமான அலுவலகத்தில் போய்க் கேட்டு ஏற்பாடு செய்யலாம்".

எங்கள் குடிசைப் பகுதியில் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்திருக்கிறோம், அதில் நீங்கள் வந்து சிறிது நேரம் எங்களுக்கு அறிவுரை கூற வேண்டும். நிகழ்ச்சி முடிந்தவுடன் உங்கள் பயணத்திற்கு ஏற்பாடு செய்கிறோம்.

மேட்டுக் குடியினர் எல்லாரும் வெறுப்புக்கொண்டு விலகிவிட்ட நிலையில் அந்த எளியமக்கள் அன்புடன்கேட்டுக் கொண்ட நிகழ்ச்சியை நடத்திக் கொடுக்க பெரியார் அப்போதே ஒப்புக்கொண்டார்.

இவர்களை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்த பர்மியரின் வாடகை ஜீப்பில் எல்லாரும் ஏறிக்கொண்டனர்.

ஜீப் குடிசைப் பகுதியில் வந்து நின்றது.

அந்தப் பகுதியில் இருந்த ஏழைமக்கள் விலகி விலகி நின்ற படி தங்கள் பகுதிக்கு வந்த பெரியாரை வியப்புடன் நோக்கினர்.

நாடு கடந்துவந்த நிலையிலும் ஊரின் ஒதுக்குப் புறத்தில் தனித்தொகுதியாக வாழ்ந்து வந்த மக்களின் வரவேற்பை அன்புடன் ஏற்றுக்கொண்டார்.

சீனாக்காரன் கடையில் வாங்கி வந்த பன்னும் டீயும் தான் அன்று பெரியாருக்கு அவர்கள் கொடுத்த விருந்து,

தாழ்த்தப்பட்ட மக்கள், சமுதாயத்தில் சமநிலைக்கு முன்னேற வேண்டிய தன்மான உணர்வூட்டும் கருத்துக்களை ஒரு மணிநேரம் பேசி அவர்களுக்குப் புத்துணர்வு உண்டாகச் செய்தார்.

அந்தத் தோழர்களுக்கு கொள்ளை மகிழ்ச்சி. தந்தை பெரியார், அவர்கள் குடியிருப்புப் பகுதிக்கு வந்து, அவர்களின் விருந்தாளியாக இருந்து அவர்களுக்கு நல்லுரை கூறி வாழ்த்திப் பேசியது பெரும் பேறு என எண்ணினார்கள்.

ஆனால் அவர்களுக்கு ஒரு வருத்தம்.

ஏற்பாடாகியிருந்த பெருமிதமான கூட்டம் நடைபெறாமல் போனதே என்பதுதான்.

மோல்மேனிலே பெரிய அளவிலே திராவிட முன்னேற்றக்கழகக் கூட்டம் ஒன்று நடத்தவேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள்.

பெரியாருக்கு வரவேற்பளிக்காதி அந்த நாளில் அவருடைய இலட்சியத்தை வளர்க்கின்ற இயக்கமாக, பர்மா திராவிட முன்னேற்றக் கழகம் மோல்மேன் கிளை வளர்ந்தது. பெரியார் வருகைக்கு முன் பத்துத்தோழர்கள் இரங்கூன் கழகத்தில் உறுப்பினர்களாக இருந்தார்கள். பெரியார் வந்து சென்றபின் சிறிது சிறிதாக இருநூறு உறுப்பினர்கள் சேர்ந்து மோல்மேன் கிளை உருவாகிவிட்டது.

ஆறு மாதம் கழித்து ஒருவாரம் விடுமுறை எடுத்துக்கொண்டு என் மனைவியுடன் சுற்றுலாப் பயணமாகச் சென்றபொழுது மோல்மேன் போயிருந்தேன், என் வருகையை அறிந்துகொண்ட அந்தத் தோழர்கள் உடனே ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். மோல்மேனில் மையப்பகுதியில் நான்கு சாலைகள் கூடும் இடம் ஒன்றில், திறந்தவெளியில் நடந்த அந்தக் கூட்டத்தில் நான் இரண்டு மணிநேரம் சொற்பொழிவாற்றினேன். பெருந்திரளான கூட்டம்.

பெரியார் வந்தபொழுது, மோல்மேனில் கூட்டம் ஒன்று நடத்தமுடியாமல் போய்விட்டது. அந்தக்குறையை இன்று தீர்த்துவிட்டோம் என்று அந்த மூன்று தோழர்களும் என்னிடம் உணர்ச்சியுடன் கூறினார்கள்.

அன்று பெரியார் அவர்கள் குடிசைப் பகுதியில் சொற்பொழிவாற்றி முடித்த பின் அந்தத்தோழர்கள், அவரை இரங்கூனுக்கு அனுப்பி வைக்கும் முயற்சியில் ஈடுபட்டார்கள்.

" அய்யா, நாளை மறுநாள் மாலைபோகும் விமானத்தில் ஒரே ஒரு இடம் இருக்கிறது. அதன் பிறகு பதினைந்து நாட்களுக்கு எந்த விமானத்திலும் இடம் இல்லை" என்று அந்தத்தோழர்கள் சொன்னபோது பெரியார் திகைத்துப் போனார்.

" வேறு வழியில்லையா?"

" அய்யா, இரயிலில் போகலாம், ஆனால் போய்ச்சேர மூன்றுநாள் ஆகும்".

" அவ்வளவு தொலைவா? பிளேனில் நாற்பது நிமிடத்தில் வந்துவிட்டோமே?"

" தொலைவு இல்லை அய்யா. அது மிகக் கடுமையான பயணம். உங்களுக்கு மிகத் தொல்லையாய் இருக்கும்."

" இரயிலுக்கு என்ன கட்டணம்?"

" பதினைந்து ரூபாய்."

" பிளேனுக்கு?"

" நாற்பது ரூபாய்".

" ஒரு சீட்டுக்கு இருபத்தைந்து ரூபாய் மிச்சம் இருக்கிறது. பதினைந்து நாட்கள் இங்கே வெட்டியாய் இருப்பதை விட இரயிலில் உட்கார்ந்துகொண்டு போகலாம்."

இன்றைக்கே இரயிலுக்கு டிக்கெட் வாங்கிவிடு.

அந்தத்தோழர் தயங்கினார். " அய்யா ரயில் பயணம் கடுமையாய் இருக்கும் நாளை மறுநாள் மாலை பிளேனுக்கு ஒரு டிக்கெட் இருப்பதாகச் சொன்னான். அதில் நீங்கள் போய்விடலாம். நாளைக் காலையில் புறப்படும் இரயிலில் இவர்கள் இருவரும் புறப்பட்டு வரட்டும்."

தோழர் ராஜாராமும் மணியம்மையாரும், அந்தத் தோழருடைய கருத்தை ஆதரித்துப் பெரியாரை வற்புறுத்தவே, பெரியார் அந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொண்டார்.

மறுநாள் காலை ரயிலில் மணியம்மையாரும், ராஜாராமும் புறப்பட்டுச் செல்லப் பெரியார், அந்த ஆதிதிராவிட தோழர்களுடன் மோல்மேனில் தங்கினார்.

ஏழைகளான அந்தத்தோழர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும், தங்களால் முடிந்த அளவுக்குப் பெரியாருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து, மணியம்மையார் கூட இல்லாத குறை தெரியாதவாறு செய்தார்கள்.

பெரியாருடைய பழக்கவழக்கங்களும், எந்தச் சூழ்நிலைக்கும் ஒத்துப்போகக்கூடிய தன்மையை இயற்கையாகவே அவருக்கு ஏற்படுத்தியிருந்தன.

ஆசார அனுஷ்டானங்களைப் பற்றிக் கவலைப்படாத நாத்திகர் ஒருவரால் தான், சூழலுக்குத் தகுந்தபடி சமாளித்துக்கொள்ளமுடியும்.

பெரியார் நாள்தோறும் குளிப்பதில்லை. இதில் என்ன வசதியென்றால், குளியலறை, வெந்நீர், சோப்பு போன்றவற்றைத் தேடிக்கொண்டிருக்க வேண்டியதில்லை.

அவர் சைவ உணவு மட்டும் சாப்பிடுபவர் அல்லர். ஆகவே சைவ உணவு கிடைக்காவிட்டாலும் கவலைப்படவேண்டியதில்லை.

அவர் அசைவ உணவு இருந்தால்தான் சாப்பாடு செல்லும் என்ற வகையும் அல்லர். ஆகவே, முழுக்க முழுக்கச் சைவமாக உள்ளவர்கள் நடுவிலும் அவர் நன்றாகச் சாப்பிட்டுக் கொண்டு இருக்க முடியும்.

சாதிமத வேற்றுமைகளைக் குழி தோண்டிப் புதைப்பதே இலட்சியமாக வாழ்ந்து கொண்டிருந்த அவர், எங்கும் எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் யார் மத்தியிலும் அன்புறவு கொண்டாடிக் காலந்தள்ளமுடியும்.

எனவே சமுதாயத்தால் கடைக்கோடியினராக ஒதுக்கப்பட்ட அந்த ஏழைத் தோழர்களின் பராமரிப்பில், பெரியார் வசதிக்குறைவு என்ற எண்ணமேயில்லாமல் – எப்போதும்போல் இயல்பாக அந்த இரண்டு நாட்களைக் கழிக்கமுடிந்தது.

மூன்றாவது நாள் மாலை வானூர்தியில் தன்னந்தனியாக பெரியார் மோல்மேனிலிருந்து இரங்கூன் வந்து சேர்ந்தார்.

விமானத் திடலிலிருந்து அலுவலகத்திற்கு அரசாங்கப் பேருந்திலேயே கொண்டு வந்து விட்டுவிட்டார்கள்.

அந்தப் பேருந்தை விட்டுக் கீழே இறங்கியவுடன் தன்னைச் சூழ்ந்துகொண்ட டாக்சிக் காரர்களில் ஒருவனுடைய வண்டியில் அவர் ஏறி உட்கார்ந்தவுடன், அவன் எங்கே போகவேண்டும் என்று கேட்காமலே பெரியாரை மவுந்தாலே வீதியில் அவர் தங்கியிருந்த வீட்டுக்குக் கொண்டு வந்துவிட்டுவிட்டான்.

பெரியாரையும் அவருடைய கருப்புச் சட்டையையும் பார்த்த பர்மியர்கள், அவர் இந்திய நாட்டின் பௌத்த பிட்சு என்றும், இந்திய நாட்டுப் பௌத்த பிட்சுக்கள் காவிக்குப் பதில் கருப்புடை அணிவது வழக்கம் என்றும் எண்ணிக்கொண்டிருந்தார்கள். பௌத்த பிட்சுக்களைப் பர்மிய மொழியில் பொங்கி என்று அழைப்பது வழக்கம். பொங்கிகளுக்குரிய மரியாதை அனைத்தும் உயரிய முறையில் பெரியாருக்கும் அந்த மக்களால் கொடுக்கப்பட்டது.

பெரும்பாலான பர்மிய டாக்சிக்காரர்கள். வெளிநாட்டுக்காரர்கள் தங்கள் வண்டியில் ஏறிவிட்டால் உள்ள வாடகையைப் போல் ஐந்தாறு பங்கு வசூலித்து விடுவது வழக்கம்.

பொங்கி என்று அவர்கள் கருதிய பெரியாரிடம், அவர் கொடுத்த [illegible] (குறைவாக இருந்தால் கூட) வாங்கிக் கொண்டு கும்பிட்டு விட்டுச் செல்வார்கள், ஒருசில வண்டிக்காரர்கள் வாடகை வாங்க மறுத்ததும் உண்டு.

பெரியார் இரங்கூனில் இல்லாத போதிலும், மோல்மேன் சென்றிருந்த அந்த மூன்று நாட்களிலும் மாலை நேரத்தில் நான் தினந்தோறும் மவுந்தாலே வீதிக்குச் செல்வது வழக்கம். அது போலவே, மற்ற செயற்குழு உறுப்பினர்களும் வருவார்கள். எல்லாரும் கூடி அங்குதான் அடுத்துள்ள நிகழ்ச்சிகளை முடிவு செய்வோம்.

மூன்றாவது நாள் மாலை நான் சென்றபோது பெரியார் வந்திருந்தார். மற்ற தோழர்களிடம் கோபம் கோபமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

மோல்மேனில் வரவேற்பு நன்றாக இருந்ததா? என்று கேட்க எண்ணி நான் வாயைத் திறக்குமுன்னே என்மீது பொரிந்து விழுந்தார்.

"என் பேச்சைக் கேட்காமல் – நீயும் கூட வராமல் வற்புறுத்தி அனுப்பிவைத்தாயே, மிக அவமானமாய்ப் போய்விட்டது" என்று ஒரே கோபமாய்ப் பேசினார்.

என்ன செய்வதென்று தெரியாமல் அமைதியாக அத்தனையும் கேட்டுக்கொண்டு கல்லுப்பிள்ளையார் போல் பேசாமல் நின்றேன்.

அவரது கோபம் சிறிது ஆறி, குரல் தணிந்த பிறகு, இராஜராமும், மணியம்மையாரும் வரவில்லையா என்று கேட்டேன்.

விமானத்திற்கு டிக்கெட் கிடைக்காததால் இரயிலில் வருவதாகச் சொன்னார்.

"இரயில் பயணம் மிக மோசமாய் இருக்குமே, பொறுத்திருந்து விமானத்திலேயே வரலாமே" என்றேன்.

"பதினைந்து நாட்களுக்கு டிக்கெட் கிடைக்காதென்று சொல்லிவிட்டான். அத்தனை நாட்கள் அந்த ஊரில் எப்படித் தங்கியிருப்பது?"

"அந்த ஆதி திராவிடப் பிள்ளைகள் மட்டும் வராமல் இருந்திருந்தால் எங்கள் நிலை எவ்வளவு மோசமாயிருக்கும்?" என்று பதிலளித்தார் பெரியார்,

"செட்டியார் நண்பர் விமான நிலையத்திற்கு வரவில்லையா?" என்று கேட்டேன்.

"அந்த ஆள் கண்ணிலேயே காணப்படவில்லை. அந்தப் பித்தலாட்டக்காரனை நம்பி எங்களைப் போகச் சொன்னாயே!" என்று மிகப் பெரிய குரலில் தொடர்ந்து பேசத் தொடங்கிவிட்டார் பெரியார்.

நான் மீண்டும் கல்லுப்பிள்ளையார் ஆனேன்.

மூன்றாவது நாள் மதியம் இராஜாராமும் மணியம்மையாரும் வந்து சேர்ந்தார்கள்.

இரயில் பயணத்தைப் பற்றி அவர்கள் பெரியாரிடமும் மற்ற கழகத் தோழர்களிடமும் கூறிக்கொண்டிருந்தார்கள். நான் ஏற்கனவே ஒரு முறை பயணம் சென்றிருக்கிறேன். அந்தத் தொல்லைகள் எனக்குத் தெரிந்தவை தான், இருந்தாலும், ஊருக்கு முற்றிலும் புதியவர்களான அவர்கள், பர்மிய மொழியும் தெரியாமல் அந்தப் பயணத்தை மேற்கொண்டது எவ்வளவு துன்பமாய் இருந்திருக்கும்!

மோல்மேன் நகர் ஆற்றின் அக்கரையில் அமைந்திருந்தது. ரயிலேற கரைகடந்து வரவேண்டும். அக்கரைக்கும் இக்கரைக்கும் சிறிய கப்பல் (Motor Launch) ஒன்று வருவதும் போவதுமாய் இருக்கும், இந்தக் கப்பலில் இருநூறு பேர்வரை வரலாம்.

இக்கரையில் உள்ள மார்ட்டபான் என்ற ஊரிலிருந்து தான் இரங்கூனுக்கு இரயில் புறப்படும்.

வெள்ளைக்காரன் ஆண்ட காலத்தில், இரவு 8.30 மணிக்கு மார்ட்டபானில் இரயில் ஏறினால் காலை ஆறுமணிக்கு இரங்கூன் வந்துவிடலாம். இரவு இரயிலில் தூங்கிவிட்டுக் காலையில் கண் விழித்தால் இரங்கூனில் இருக்கலாம்.

இவ்வளவு எளிதான இரயில் பயணம், பர்மா விடுதலையடைந்த பிறகு பெருந் துன்பப் பயணமாக மாறிவிட்டது. மூன்றுநாள் பயணம் ஆகிவிட்டது. சூழ்நிலை இந்தக் கொடுமையை உருவாக்கி விட்டது.

பர்மா விடுதலை அடைந்தவுடன், எந்தெந்த ஊரில் இராணுவ முகாம்கள் இருந்தனவோ அந்த நகரங்கள் மட்டுமே பர்மிய அரசாங்கத்தின் கையில் இருந்தன. நாட்டின் பெரும்பகுதி கலகக்காரர்கள் (INSURGENTS) வசமாகிவிட்டது.

பர்மா விடுதலை அடைந்த உடன் பெரும்பாலான பகுதிகளைக் கலகக்காரர்கள் வசப்படுத்திக் கொண்டார்கள்.

இரண்டாவது உலகப்போரின் போது சப்பானியப் படைகளும், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அமைத்த இந்திய தேசிய ராணுவமும் மலேயாவை வசப்படுத்தி பர்மா வழியாக இந்தியாவை நோக்கிப் படையெடுத்து வந்தார்கள். இந்திய தேசிய ராணுவமும் சப்பானியப் படைகளும் ஒவ்வொரு ஊராகப் பிடித்துக்கொண்டு வந்தபோது பிரிட்டிஷாரின் இந்தியப் படை பின்வாங்கிக் கொண்டு வந்தது. பின்வாங்கி ஓடும் படையினர் ஆங்காங்கே இராணுவ முகாம்களில் விட்டு விட்டு வந்த ஆயுதங்களையும், வெடி மருந்துகளையும், கம்யூனிஸ்டுகள், கரீன்கள் போன்ற எதிர்க் கட்சிக்காரர்கள் எடுத்துப் பதுக்கி வைத்துக் கொண்டார்கள்.

கடுமையும் கொடுமையும் மிகுந்த சப்பானிய ஆட்சியில் அவர்கள் பதுங்கிப் பதுங்கி வாழ்ந்ததால், இந்த ஆயுதங்களைப் பயன்படுத்தமுடியவில்லை. ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு, பிரிட்டிஷ் ராணுவம் திருப்பித்

தாக்கி சப்பானியர்களை ஓடோட விரட்டி, பர்மாவையும், மலேயாவையும் சப்பானியர் பிடியிலிருந்து மீட்டுவிட்டது.

சப்பானியர் தோற்றோடும் போது மீண்டும் எதிர்க்கட்சிக்காரர்கள், சப்பானியர் விட்டுச்சென்ற ஆயுதங்களையும், வெடி மருந்துகளையும் பதுக்கிக் கொண்டார்கள்.

வெள்ளையரிடமிருந்து நாடு விடுதலையடைந்தபோது, நாட்டின் மிகப்பெரிய கட்சியான பாசிச எதிர்ப்பு மக்கள் முன்னணிக் (பசபலா) கட்சியிடம் ஆட்சி ஒப்படைக்கப்பட்டது.

வெள்ளையர்கள் வெளியேறி விட்டார்கள். பர்மிய நாடு விடுதலை பெற்றது. கட்டுப்பாடும், நாட்டு ஒற்றுமையும் இல்லாததால் பலப்பல அரசுகள் தோன்றிவிட்டன.

சட்டப்படியான அரசாங்கத்தின் கையில், நகரங்களும், அவற்றைச் சுற்றியுள்ள ஊர்களும் மட்டுமே இருந்தன. சிற்றூர்களும், மலைப்பகுதிகளும், காடுகளும் நூற்றுக்கணக்கான குழுக்களின் ஆட்சிக்கு ஆட்பட்டன. எதிர்க்கட்சிகள் கையில் ஆயுதம் இருந்ததால், அவை தனித்தனியாக கொரில்லா அரசுகளாகச் செயல்பட்டன.

நாட்டு மக்கள் பெரும் அவதிக்குள்ளானார்கள். பர்மாவின் தென் பகுதியில் தனி கரீன் நாடு கேட்கும் கரீன்கள் பல பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

பர்மாவின் வட பகுதியில் சீனத் தலைமையில் இயங்கிய வெள்ளைப் பட்டை கம்யூனிஸ்டுகளும், ரஷ்யத் தலைமையில் இயங்கிய சிவப்புப்பட்டை கம்யூனிஸ்டுகளும், தங்கள் ஆதிக்கத்தில் பல பகுதிகளை வைத்துக்

கொண்டார்கள், இவர்கள் அன்னியில், ஏகப்பட்ட கொரில்லாக் குழுக்கள், எந்த வித இலட்சியமுற்ற குழுக்கள், தத்தம் அதிகாரத்தில் சில பல ஊர்களை வைத்துக்கொண்டன.

நாடு முழுவதும் தனித்தனி ஆட்சிகள் அமைந்து ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போய் வர முடியாமல் இருந்தது.

நாட்டு விடுதலைக்காகப் போராடி, முதல் அரசு அமைத்த தளபதி அவுங்சான், ஒருநாள் அமைச்சரவையைக் கூட்டியிருந்தபோது, தீவிர கம்யூனிஸ்டுகளால் அமைச்சர்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாகச் சுட்டுக் கொல்லப்பட்டார்கள்.

அந்தக் கூட்டத்திற்குத் தாமதமாக வந்த ஊநூ தப்பிப்பிழைத்தார். ஊநூ தலைமையில் புதிய அமைச்சரவை ஏற்பட்டு, தளபதி அவுங்சானின் இலட்சிய வழியில் நாடு நடைபோட்டது.

ஊநூவின் பெரு முயற்சியால், நாட்டின் பல பகுதிகள் கலகக் குழுவினரிடமிருந்து மீட்கப்பட்டு, போக்குவரத்துத் தொடங்கப்பட்டது.

ஆற்றுப் பாதைகளில் கப்பல்கள் (Motor Launches) போய் வரத் தொடங்கின, சாலைப் போக்குவரத்துகளும் நடக்கலாயின. ஆனால், பயணங்கள் எல்லாம் பாதுகாப்பற்றவையாகவே இருந்தன.

மார்ட்டபான் நகரில் புறப்படும் இரயில் இரங்கூன் வந்து சேர மூன்று நாள் ஆகியது. ரயில் பயணம் நடைபெற்றவிதம் இதுதான்:

மார்ட்டபான் நகரிலிருந்து இரயில் புறப்படு முன் முதலில் எஞ்சினும் ரயில் பெட்டி ஒன்றும் அடுத்த ஸ்டேஷன் வரைபோகும். அந்த ரயில் பெட்டியில் அரசுப்படை வீரர்கள் இருப்பார்கள்.

பாதை சரியாக இருந்தால், எஞ்சின் திரும்பி வந்து மற்ற ரயில் பெட்டிகளை இழுத்துச் செல்லும், மறுபடியும் அந்த ஸ்டேஷனிலிருந்து அடுத்த ஸ்டேஷனுக்கு எஞ்சினும் முதல் பெட்டியும் போய்வரும். பாதை சரியாக இருந்தால் மறுபடி வந்து மீத வண்டிகளை இழுத்துச் செல்லும். பாதையில் ஏதேனும் பழுதுபடுத்தப்பட்டிருந்தால் அதைச் சரி செய்துவிட்டுப் பயணம் தொடரும். இப்படியாக ஒவ்வொரு ஸ்டேஷனுக்கும் எஞ்சின் வண்டி இரண்டு முறை வந்துபோகும். [illegible] 5 அல்லது 6 மணியளவில் எந்த ஸ்டேஷனை அடைகிறதோ அந்த ஸ்டேஷனில் வண்டி நின்றுவிடும். மேற்கொண்டு மறுநாள் [illegible] ஆறு மணிக்குத்தான் பயணம் தொடரும்.

பயணிகள் தங்கள் மூட்டை முடிச்சுகளுடன் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் வந்து படுத்துக்கொள்வார்கள். படை வீரர்கள் புகைவண்டி நிலையத்தைப் பாதுகாப்பார்கள். மறுநாள் காலை மூட்டை முடிச்சுகளுடன் ரயிலில் இடந்தேடி அமர்ந்து கொள்ள, முதலில் எஞ்சின் அடுத்த ஊர்போய் வந்து மீண்டும் இழுத்துச்செல்ல இப்படியே ஆமை வேகத்தில் பயணம் நடைபெறும்.

இடையில் ஓர் ஆற்றுப்பாலம், சப்பானியர் தோற்றோடும் போது அவர்களால் தாக்கப்பட்டு, மீண்டும் கட்டப்படாமலே இருக்கிறது. இந்த ஆற்றங்கரை வந்தவுடன் இரயில் நின்றுவிடும்.

இரயிலில் வந்தவர்கள் மூட்டை முடிச்சுகளோடு இறங்கி ஆற்றில் நிற்கும் தெப்பம் ஒன்றில் ஏறி அக்கரை வரவேண்டும். இந்தத் தெப்பம் இரயிலில் வந்தவர்கள் அனைவரையும் கொண்டு சேர்க்க நான்கைந்து முறை வந்து போகும்.

ஒவ்வொரு முறையும் இக்கரையில் உள்ளவர்களை அக்கரைக்கும், அக்கரையில் உள்ளவர்களை இக்கரைக்கும் கொண்டுபோய்ச் சேர்க்கும். அக்கரையில் மக்களை இறக்கிவிட்டு மற்றொரு ரயில்வண்டி புறப்படத் தயாராக இருக்கும்.

அந்த வண்டியில் எல்லாரும் ஏறிக்கொண்டிருக்கும் நேரத்தில் எஞ்சின், இராணுவ வண்டியுடன் அடுத்த ஊர் போய்த்திரும்பும், மீண்டும் இரங்கூன் வரும் வரை, ஸ்டேஷனுக்கு ஸ்டேஷன் காத்திருந்து பயணம் செய்யவேண்டும்.

மிகப் பொறுமையுள்ள மக்கள் மட்டுமே இந்த இரயில் பயணம் மேற்கொள்ளமுடியும். இப்படிப்பட்ட பயணத்தை மேற்கொண்டு முடித்த தோழர் இராசாராமும் மணியம்மையாரும் பொறுமையின் இலக்கணத்தை அறிந்து கொண்டிருப்பார்கள்.

பயணம் எப்படியிருந்ததென்று மணியம்மையாரைக் கேட்டபொழுது, இரங்கூனில் இருந்தவரை, இந்தியாவின் மற்றோர் ஊரில் இருப்பது போன்ற உணர்வுதான் இருந்ததென்றும், இந்தப் பயணத்தின் போதுதான் பர்மிய மக்களின் இடையே முற்றிலும் புதிதான சூழ்நிலையில் இருக்கநேர்ந்ததென்றும் கூறினார்கள்.

இந்தியர்கள் பர்மியர் வீடுகளில் உணவு உண்பதில்லை. கொடுமை என்னவென்றால், பர்மியப் பெண்களைத் தங்கள் மனையாட்டிகளாக வைத்திருக்கும் இந்தியர்களே, அவர்கள் சமைத்தவற்றை உண்பதில்லை. இந்தியர்களின் இப்படிப்பட்ட ஆசாரமுறையே பர்மிய மக்கள் இந்தியர்களை முற்றிலும் வெறுக்கக் காரணமாய் அமைந்துவிட்டது.

மணியம்மையார் இரயில் பணத்தின் போது பர்மியர்கள் செய்து விற்ற தின்பண்டங்கள் பலவற்றை வாங்கிச் சாப்பிட்டதாகவும், அவை [illegible] இருந்ததாகவும் கூறினார்கள்.

நான் பல பர்மியர் உணவுக் கடைகளில் சென்று உணவுண்டிருக்கிறேன். அவர்கள் நம்மைக் காட்டிலும் தூய்மையாகவும், நல்ல தோற்றமும் சுவையும் உடையனவாகவும் அவற்றைத் தயாரிக்கிறார்கள். இந்தியாவைச் சேர்ந்த நான் பர்மியர் உணவுகளை விரும்பிச் சாப்பிடுவதைக் கண்டு அவர்கள் வியப்படைந்திருக்கிறார்கள்.

இந்திய மக்கள் பர்மிய மக்களோடு ஒட்டுறவு இல்லாமல் வாழும் முறையைப் பெரியார் தம்முடைய சொற்பொழிவுகளில் கண்டித்துப் பேசியிருக்கிறார்; அயல் நாட்டில் வாழும் தமிழர்கள், அந்த நாட்டு மக்களோடு ஒன்றிப்பழகவேண்டுமென்றும், கூடுமான வரை அந்த நாட்டையே தங்கள் தாய்நாடாகப் பாவிக்கவேண்டும் என்றும் பெரியார் அறிவுரை கூறியிருக்கிறார்.

சிங்கப்பூர் செல்லும் நாள் வந்தது. கப்பலடிக்கு பெரியாரை வழியனுப்ப பர்மா திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் யாவரும் வந்திருக்கிறார்கள்.

கப்பலடியில் [illegible] தோழர்கள் பெரியாருடன் படம் எடுத்துக்கொண்டார்கள். எல்லாம் முடிந்த பிறகு, "முடிந்ததா? நான் உள்ளே போகலாமா?" என்று சோதனைக் கூடத்திற்குள் நுழைய முற்பட்டார் பெரியார்.

திடீரென்று என் பக்கம் திரும்பினார்.

"நானும் பார்க்கிறேன்; எவனெவனோ வந்து படம் எடுத்துக்கொள்கிறான்; நீ என்னோடு நின்று ஒரு படம் கூட எடுத்துக்கொள்ளவில்லையே! இங்கே வா!" என்று அழைத்தார் பெரியார்.

புகைப்படக் காரரை அழைத்து "எங்களை [illegible] படம் எடு" என்று கட்டளையிட்டார்.

அவர் எடுத்தாயிற்று என்று சொன்னபிறகு சோதனைக் கூடத்திற்குள் நுழைந்தார். நானும் அவருடைய பெட்டியுடன் பின் தொடர்ந்தேன். மற்ற தோழர்கள் வெளியில் நின்றுவிட்டார்கள்.

சோதனை முடிந்து கப்பலுக்குள் சென்றோம். பெரியாருக்கென்று பதிவு செய்யப்பட்ட கப்பல் அறை (Cabin) வரை நானும் சென்றேன்.

பெட்டியை அறையின் உள்ளே வைத்துவிட்டு. அறைக்கதவின் அருகில் வந்து நின்றேன். "போய் வாருங்கள் வணக்கம்" என்று கூறினேன்.

பெரியார் தம் இரு கைகளாலும் என் இரு தோள்களையும் பிடித்துக் கொண்டார்.

"நான்கு நாட்களாக நானும் பார்க்கிறேன். முதலில் இருந்த உற்சாகம் உன் முகத்தில் தெரியவில்லை. என் மோல்மேன் பயணத்தையும், நான் கோபித்துக் கொண்டதையும் நினைத்து நீ வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறாய். அன்று கோபித்துக்கொண்டதோடு நான் மறந்துவிட்டேன். நீயும் மறந்துவிடு. என் வாழ்க்கையில் இதைக் காட்டிலும் மோசமான நிலைகளை நான் பார்த்திருக்கிறேன்.

"இதற்கெல்லாம் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தால் பயனில்லை. நீ மறந்துவிடு. மறந்துவிடுவேன் என்று சொல்" என்று வாஞ்சையோடு கூறினார்.

"அய்யா நான் மறந்துவிடுகிறேன். வணக்கம்'. என்று கூறியபிறகு தான் தன் கைகளை எடுத்துக்கொண்டார்.

பெரியார் என்னை – என் தவறை மன்னித்துவிட்டார் என்ற உணர்வோடு என்னை யழுத்திக் கொண்டிருந்த மனத்துயரை இறக்கிவிட்டு நான் கப்பலை விட்டு இறங்கிவந்தேன்.

துறைமுகத்தின் வெளியில் எனக்காகத் தோழர்கள் காத்துக்கொண்டிருந்தார்கள்.

மனநிறைவோடு வணக்கம் சொல்லிக்கொண்டு அவரவர் வீடுநோக்கிப் புறப்பட்டோம்.

பெரியார் வருகை எல்லாருக்கும் ஒரு புத்துணர்வை ஏற்படுத்தியிருந்தது. அடுத்தடுத்து நடந்த கழகக் கொள்கை பரப்புக் கூட்டங்களில் அந்தப் புத்துணர்வின் எழுச்சியைக் காணமுடிந்தது.

# சின்னச் சின்னச் செய்திகள்

பெரியார் தம்முடன் புகைப்படம் எடுத்துக் கொள்பவர்களுக்கு ரூபாய் ஐந்து கட்டணம் வைத்தார்; பலர் ஐந்து ரூபாய் கொடுத்து பெரியாருடன் படம் எடுத்துக் கொண்டார்கள். பர்மா திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் ஒருவர் ஏழைத் தொழிலாளி.

"நாங்கள் கூடப் பணம் கொடுத்துத்தான் படம் எடுத்துக் கொள்ளவேண்டுமா?" என்று கேட்டார்.

"நீங்கள் என் பிள்ளைகள். உங்களுக்குக் கட்டாயமில்லை. பதிமுகவைச் சேர்ந்தவர்கள் இலவசமாகவே படம் எடுத்துக்கொள்ளலாம்" என்று பெரியார் விதிவிலக்கு அறிவித்துவிட்டார்.



ஒரு நாள் ஒரு பெரியவர் பெரியாரைப் பார்க்க வந்திருந்தார். ஐயா நான் காங்கிரஸ்காரன். உங்களோடு படம் எடுத்துக்கொள்ள விரும்புகிறேன். அனுமதிப்பீர்களா?" என்று கேட்டார்.

"காங்கிரஸ் பெரிய கட்சி, ஆகையால் நீங்கள் பத்து ரூபாய் கொடுக்கவேண்டும்" என்றார் பெரியார்.

அந்தப் பெரியவர் பத்துரூபாய் கொடுத்துப் படம் எடுத்துக்கொண்டார்.



நெற்றி நிறைய நீறும் உருத்திராட்சமும் சட்டைபோடாமல் மேல் துண்டும் அணிந்திருந்த ஒரு பெரியவர் பெரியாரைப் பார்க்கவந்தார்.

வணக்கம் சொல்லி வரவேற்று இருக்கச் சொல்லி உபசரித்தார் பெரியார்.

அந்தப் பெரியவர் கேட்டார். நீங்கள் நாத்திகர், முஸ்லீம்கள் ஆத்திகர்கள். அவர்களை மட்டும் ஆதரிப்பதன் நோக்கம் என்ன?

பெரியார் பதில் சொன்னார்.

"அவர்கள் யோக்கியமான ஒரே ஒரு கடவுளை வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய கடவுள் வைப்பாட்டி வைத்துக்கொள்வதில்லை".

வந்தவர் முகத்தில் ஈயாடவில்லை. எழுந்துபோய் விட்டார்.



பாங்கில் வேலைசெய்யும் நண்பர் ஒருவர் பர்மா திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர். ஒருநாள் இரவு பெரியாருக்கு விருந்து ஏற்பாடு செய்தார். விருந்துக்கு ஐம்பது பேருக்கு அழைப்பு கொடுத்திருந்தார். இலையில் உட்கார்ந்த பெரியார் திரும்பிப்பார்த்தார். அந்த நண்பரை அழைத்தார்.

"எனக்குத்தானே விருந்து வைப்பதாகச் சொன்னாய் நாங்கள் மூன்றுபேர், செயலாளர், பொருளாளர் இரண்டு பேர் ஆக ஐந்து பேருக்குச் சொன்னால் போதுமே, எதற்காக இத்தனை பேர்? இப்படிச் செலவாகிற பணத்தையெல்லாம் கொடுத்தால் எனக்கு நிதி சேருமே?" என்றார்.

"மன்னித்துக்கொள்ளுங்கள் ஐயா, உங்களுக்கு நிதியும் தருகிறேன்," என்று கூறி நூறு ரூபாய் கொடுத்தார்.



அகில பர்மா தமிழர் சங்கத்தின் தலைவர் முத்துராமலிங்கத் தேவர், பசும்பொன் முத்துராமலிங்கத் தேவரின் உறவினர். பெரிய மீன் வியாபாரி, மொத்த வியாபாரம், ஏராளமான படகுகளுக்குச் சொந்தக்காரர். பெரியாரைப் பார்க்க வந்திருந்தார். காரில் பத்துக்கிலோ எடையுள்ள ஒரு பெரிய மீன் கொண்டு வந்தார்.

"ஐயா என் அன்பளிப்பு" என்று மீனைத் தூக்கிப் பிடித்தார்.

"நாங்கள் ஓட்டலில் சாப்பாடு எடுத்துச் சாப்பிடுகிறோம். இங்கு சமைக்க ஆளில்லை. இதைச் சமைத்து எடுத்துக் கொண்டு வாருங்கள்" என்றார் பெரியார்

அன்று மாலை தேவர் வீட்டிலிருந்து சாப்பாடு வந்தது பெரியாருக்கு மீன் குழம்புடன்.

சாப்பிட்டு முடித்தவுடன் கூலி எங்கே? என்றார் பெரியார்.

எதற்கு?

விருந்து சாப்பிட்டதற்கு.

தேவர் நூறுரூபாய் கொடுத்தார். பெரியார் மகிழ்ச்சியுடன் வாங்கிக் கொண்டார்.



கார் வைத்திருந்த நண்பர் ஒருவர் பெரியாருக்கு நகர் சுற்றி பார்ப்பதற்கென்று ஒருநாள் தம் காரைக் கொடுத்திருந்தார்.

துறைமுகப் பகுதியில் சென்று கொண்டிருந்தோம் போலீஸ்காரர்கள் யாரும் காணப்படவில்லை என்ற எண்ணத்தில் காரோட்டி நோ என்ட்ரி போட்டிருந்த பகுதியில் நுழைந்தார். உடனே ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்த போலீஸ்காரன் காரை நிறுத்தினான்.

அவன் காரோட்டியைக் கண்டித்துக் கொண்டிருந்த போது, சற்றுத் தொலைவிலிருந்த ஓர் அதிகாரி ஓடிவந்தார்.

அந்தப் போலீஸ்காரனைக் கோபித்துக்கொண்டார். உள்ளேயிருப்பவரை நீ பார்க்கவில்லையா? அவர் இந்தியப்பொங்கி, பேசாமல் இரு என்று சொல்லிக் காரை போக அனுமதித்தார்.

காரோட்டி, சரியான பாதையில் செல்வதற்காக காரைப் பின்னுக்குச் செலுத்தினார்.

அப்படிப்போனால் சுற்றுவழி. நீ இப்படியே போ என்று நோ என்ட்ரி வழியாகவே போக வற்புறுத்தினார் அந்த போலீஸ் மேலதிகாரி.



இரங்கூன் தியேட்டர் ஒன்றில் முப்பரிமாணப் படம் (Three Dimension) ஒன்று ஓடிக்கொண்டிருந்தது. உருவங்களை நேரில் பார்ப்பது போல் அமைந்துள்ளது பற்றி பெரியாரிடம் கூறினோம்.

அதைப் பார்க்கவேண்டும் என்றார் பெரியார், மறு நாள் பதிவு செய்து அழைத்துச் சென்றோம்.

விஞ்ஞான முன்னேற்றம் கண்டு அதிசயப்பட்டார்..

சினிமாப் பார்க்கக் கூடாதென்று சொன்ன நீங்கள் நேற்று சினிமாப் பார்க்கப் போனீர்களே? சரி தானா? என்று ஒருவர் கேட்டார்.

பெரியார் அமைதியாகப் பதில் சொன்னார். காதல், கற்பழிப்பு, கொலை, கொள்ளை, புராணம், மூடபக்தி என்று சினிமாப் படம் பிடிப்பதால் பார்க்கக்கூடாது என்கிறேன்.

விஞ்ஞான முன்னேற்றத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டும். கல்விக்கு சினிமா பயன்படுத்தப்படவேண்டும். அப்போது எல்லாரும் சினிமாப் பார்க்கலாம்.

அந்த நண்பர் உண்மையான ஞானம் பெற்றவரானார்.



"இருக்கின்ற மதங்களிலே புத்தமதம் சிறந்ததாகத் தெரிகின்றது. நீ என்ன நினைக்கிறாய்?" என்று கேட்டார். பெரியார்.

" புத்தர் தோற்றுவித்த புத்த சங்கம் மிகச் சிறந்ததுதான். ஆனால் இன்றுள்ள புத்தமதம் தெய்வநம்பிக்கையில்லாத புத்தரையே தெய்வமாக்கிவிட்டது. புத்தர் எதுஎது

கூடாதென்று சொன்னாரோ அதையெல்லாம் செய்யும் மதமாக இருக்கிறது. மறுபிறப்பில் நம்பிக்கையில்லாத புதர் பல பிறப்புப் பிறந்ததாக சாதகக் கதைகள் கூறுகின்றன.

"இன்றுள்ள புத்த பிட்சுக்கள் ஜோதிடம் பார்க்கிறார்கள்; மக்களுக்கு மந்திரவாதிகளாக பில்லி சூனியம் ஆக்குபவர்களாகவும் நீக்குபவர்களாகவும் செயல்படுகிறார்கள். தங்கள் காலடியில் மக்கள் தெய்வமாக விழுந்து வணங்குவதைப் பெருமையாகக் கருதுகிறார்கள்.

"மக்களோ, புத்த பிட்சுக்கள் தெய்வ அருள் பெற்றவர்கள் என்றும், அவர்களுக்குச் செய்யும் தொண்டு மோட்சத்தில் சேர்க்கும் என்றும் நம்புகிறார்கள். இங்குள்ள பெண்கள் தங்கள் கூந்தலை விரித்துப்போட்டு அதன் மீது பிட்சுக்கள் பாதம் பட நடந்து போவதால் சுவர்க்கத்தில் இடங்கிடைக்கும் என்று நம்புகிறார்கள். பேய் பிடித்தல், பேய் விரட்டல் முதலியவை தொடர்ந்து நடைபெறுகின்றன. சிறு தெய்வவணக்கம் சிறிதும் குறைய வில்லை. சிறு தேவதைகளுக்கு நடக்கும் பூசைகளும் குறையவில்லை.

"புத்தமதம் இன்று மற்றொரு இந்து மதமாகவே காட்சியளிக்கிறது".

நான் சொல்லி முடித்ததும், புத்த மதம் இவ்வளவு மோசமாக இருக்கிறதா? என்று வியப்படைந்தார்.



சிங்கப்பூரிலிருந்து கப்பலில் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்த பெரியாரை; "ஸ்டேட்ஸ்மன்" செய்தியாளர் பேட்டிகண்டு புத்தமதத்தைப் பற்றி உங்கள் கருத்து என்ன? என்று கேட்டார்.

"எல்லா மதங்களும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்தான்" என்று ஒரே வரியில் பதிலளித்தார் பெரியார்.



டாக்டர் அம்பேத்கார் புத்த மதத்துக்கு மாறியபோது புத்த பிட்சுக்கள் பல சடங்குகள் செய்து சாத்திரமுறைப்படி அவருக்கு தீட்சை செய்து புத்தராக மாற்றினார்கள், அம்பேத்காருடன் சேர்ந்தவர்களும் இவ்வாறே சாத்திர முறைப்படி மதமாற்றம் பெற்றார்கள்.

கருத்து மாற்றத்துக்கு சடங்கு, சாத்திரம் எல்லாம் தேவையில்லை என்பது பெரியார் கொள்கை. எனவே டாக்டர் அம்பேத்கார் பல முறை வற்புறுத்தியும் புத்தமதத்திற்கு மாறவில்லை.

புத்தர் பழுத்த நாத்திகராக விளங்கினார். இன்று பெரியார் எவ்வளவு தீவிரமாகப் பேசுகிறாரோ, அதே தீவிரத்தோடு இந்து மதத்தை எதிர்த்துப் போராடியிருந்தார் புத்தர்.

புத்தமதத்தில் ஊடுருவியவர்கள் செய்த சூழ்ச்சியால் புத்தர் இன்று புத்த பகவான் ஆகிவிட்டார். அவருடைய பல், தலைமுடி மற்ற உறுப்புக்கள் இருக்கும் இடமெல்லாம் புத்தர் கோயில்களாகி விட்டன.

இந்த நிலை பிற்காலத்தில் பெரியாருக்கு ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

கால காலத்துக்கும் அவர் நாத்திகராகவே விளங்கவேண்டும். அப்போதுதான் எதிர்கால இளைஞர்கள் பகுத்தறிவுச் சுடர்களாக ஒளிவீசமுடியும்.

## தமிழர் தலைவர்

அருள் பொலியும் திருமுகத்தான்
அன்பு நிறை நெஞ்சத்தான்
இருள் விலகப் பணிபுரியும்
இனியதவம் இயற்றுகின்றான்!

தமிழரெலாம் தலைநிமிர்ந்து
தன்மானம் மிக்கவராய்
வாழ்வதற்குக் காரணனாய்
வந்துதித்த பெருந்தலைவன்!

கண்மூடிப் பழக்கமெல்லாம்
மண்மூடிப் போவதற்கே
எண்ணியெண்ணிச் செயலாற்றும்
இதயமுள்ள மாமனிதன்!

தீதுக்குக் காரணமாம்
தெய்வ மத சாத்திரத்தை
வாதிட்டே யொழிக்கவந்த
வண்டமிழர் தலைவனிவன்!

## ஈரோட்டுத் தாத்தா

வாடும்நாள், வாழும் வகையினை அறிஞர்
தேடும்நாள் அறிஞரைத் தோற்றுதற் கென்று,

தமிழறம் பேணும் தகைமை யாளர்!
அமைதியாய்ச் சிந்தித் தறியும் மாண்பினர்!

வள்ளுவர் நெறியை வாழ்க்கையிற் காட்டும்
தெள்ளிய உள்ளச் செவ்வி யுடையார்!

உளம்சொல் உடலால் உவப்புறும் பணியை
இளமைப் பொழுதிலும் வளர்தமிழ் நாட்டுக்கு

அளித்த வள்ளல்! அஞ்சாச் சிங்கம்!
உழைப்பின் பயனை விழையாச் செல்வன்!

சிந்தனைச் சிற்பி! திராவிடத் தந்தை!
வந்தனைக் குரிய வடிவிற் பிறந்தார்!

ஈரோட்டுத் தாத்தா! தமிழர்
பாராட்டும் பெரியார் இராம சாமியே!

# கீதை காட்டும் பாதை

பக்தியின் பெயரால்
ஞானம் என்ற பெயரால்
யோகம் என்ற பெயரால்
தத்துவம் என்ற பெயரால்
ஆன்மீகம் என்ற பெயரால்

கீதை பன்னிப்பன்னித் திரும்பத் திரும்பக் கூறுவதெல்லாம், நான்கு வருணப் பாடுபாடுதான்.

உலகத்தில் எந்த நாட்டிலும் இல்லாத கொடுமை இந்த நாட்டிலே உருவாகியிருக்கிறது. இந்தக் கொடுமையான ஏற்பாட்டை நான் தான் செய்கிறேன் என்று கூறுபவன் இங்கு கடவுளாகக் கருதப் படுகிறான்.

அதனால் தான் முன் காலத்தில் புத்தரும், பின் காலத்தில் பெரியாரும்.

கடவுள், மதம், வேதம், உபநிடதம், புராணம், சாத்திரம், சம்பிரதாயம் அத்தனையும் ஒழிக்கப்பட வேண்டும் என்று அறிவுரை கூறினார்கள்.

அருமையான ஆராய்ச்சிநூல்
கீதை காட்டும் பாதை என்ற நூலில்
**பாவலர் நாரா நாச்சியப்பன்**

# கிழச் சிங்கம்

வெண்மை யான தாடியுளார்—கொள்கை
விளக்கிப் பேசும் சொற்பொழிவில்
உண்மை யிருக்கும்; பயனிருக்கும்—தமிழர்
உயர்வுக் கான கருத்திருக்கும்!

சூதும் வாதும் செய்பவரைக்—கண்டால்
தூவென் றுமிழ்ந்து தள்ளிடுவார்
சாதி வெறியும் மதவெறியும்—போனால்
தானே நன்மை வருமென்பார்

பழைய புராணம் படித்ததனை—நாட்டில்
பரப்பு வோர்க்குப் பகையாவார்
உழைப்பு முயற்சி பகுத்தறிவு—மிகவும்
உடையோர்க் கன்புத் தாயாவார்!

இறைத்துப் பாய்ச்சும் தண்ணீர் போல்—அவர்
எழுச்சிக் கருத்தும் பயன்தருமே!
நரைத்துத் திரைத்து மூத்திடினும்—தமிழ்
நாட்டுக் குழைக்கும் பெரியாரே!

நேரிய ஒழுக்கம்; பண்புடைமை—நாட்டில்
நிலைபெற் றோங்க வேண்டுமெனும்
சீரிய கருத்தை உடையவராம்—கிழச்
சிங்கம் பெரியார் வாழியவே!